Regd. M. No. 5934 Phone No. 21841

# ஜனசக்தி

ஆசிரியர்: ப. ஜீவானந்தம் JANASAKTHI

(காலைப் பதிப்பு)





மலர் 15 இதழ் 323] சென்னை 10-7-59 விகாரி௵ ஆனி௴ 26உ வெள்ளிக்கிழமை [4 பக்கங்கள் 7 காசுகள்


# கேரள சர்க்காருக்கு எதிராகக் கெடுபிடியா?

## பிரதமர் நேருவின் விமரிசனம் அராஜகத்திற்கே துணை நிற்கும்

### தலையீடே நோக்கமென்றால் பளிச்சென்று கூறலாமே!

### நேருவுக்கு அஜய் கோஷ் பதில்

திருவனந்தபுரம், ஜூலை 9—

பிரதமர் நேரு வெளியிட்ட சில கருத்துக்கள் வாஸ்தவத்தில் கேரளத்தில் குழப்பத்தையும் அராஜகத்தையும் ஏற்படுத்திவரும் சக்திகளுக்கு துணை செய்கின்றன. இது கண்டு நான் வருந்துகிறேன் என்று இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் பொதுச் செயலாளர் அஜய்கோஷ் கூறினார்.

கேரள சர்க்காருக்கு எதிராக ஒரு கெடுபிடிப் போராட்டம் நடத்தி அதனைச் சோர்வடையச் செய்யவும், நெருக்கடியை உக்ரப்படுத்தவும் சகஜநிலை மீண்டும் ஏற்படுவதைத் தடுக்கவும் சர்க்கார் ஊழியர் மனக்கறுத்தைக் குலைக்கவும் முயற்சிகள் நடத்தப்படுகின்றன. இவற்றை எல்லாம் செய்துவிட்டால் ஜனாதிபதி ஆட்சியைக் கொண்டுவருவதை நியாயப்படுத்தலாமல்லவா?" என்று அவர் கேட்டார். பிரதமரின் எண்ணம் இதுவாக இருந்தால் இதை வெட்டவெளிச்சமாகப் பளிச்சென்று எடுத்துக்கூறட்டும் என்றார்.

#### அராஜகத்திற்குத் துணை

"வேறு வழியில்லை என்றால் மத்தியத் தலையீடு என்ற நடவடிக்கை எடுக்க நேரும்" என்று பிரதமர் நேரு கூறியுள்ளதைச் சுட்டிக்காட்டிய அஜய் இவ்வாறு மத்திய தலையீடு என்ற பயமுறுத்தல்தான் எதிர்க்கட்சிகளுக்கு இந்தப் போராட்டத்தில் இறங்கவும் மக்களுக்கு எதிராகவும் பொது சொத்துகளை அழிக்கும் இதை மேலும்மேலும் காலித்தனமாக நடத்தவும் துணிச்சல் அளித்திருக்கிறது என்று பலமுறை நாம் சுட்டிக்காட்டியிருக்கிறோம்" என்றார்.

பல்வேறு துபர நிகழ்ச்சிகளுக்கு காரணமாகிவிட்ட இந்த நாசகரப் போராட்டத்தைக் கைவிட வேண்டுமென்று பிரதமர் நேரு தம்மைப் பின்பற்றுவோருக்கு அறிவுரை கூறவில்லை. மாறாகப் பிரதமர் நேரு தவறான வழியில் கேரள சர்க்கார் ராஜினாமா செய்ய வேண்டும் என்ற ஜனநாயக விரோதமான கோரிக்கையை ஊர்ஜிதம் செய்திருக்கிறார். இது மிகவும் வருந்தத்தக்க விஷயம் என்றார் அஜய்.

#### நேரு விளக்குவாரா?

கேரளத்தில் ஜனநாயகத்தின் கட்டுக்கோப்பு இருந்தாலும் அதன் சாரம் மறைந்து வருகிறது என்று பிரதமர் நேரு கூறியுள்ளதைப் பற்றிக் குறிப்பிட்ட அஜய் இந்தப் பயங்கரக் குற்றச்சாட்டை விளக்க நேரு ஏதாவது முயற்சிகள் செய்தால் நன்றியுடையவனாக இருப்பேன். சில நாட்களுக்கு முன்பு காங்கிரஸ் பார்லிமெண்டரி போர்டு நிறைவேற்றிய தீர்மானத்தில் கூட இவ்வாறு குறிப்பிடவில்லை என்று அஜய் சுட்டிக்காட்டினார்.

#### ஜனநாயகம் ஆக்கமுற்றது

கடந்த இரண்டு வருடங்களாகக் கேரள சர்க்கார் எடுத்து வந்துள்ள நடவடிக்கைகள் பற்றி நேருவுக்குத் தெரியும் என்பது நிச்சயம். நில உறவு மசோதா, கடன் நிவாரண மசோதா, கல்வி சட்டம், பஞ்சாயத்து ஜில்லா கவுன்சில் மசோதா இவை எல்லாம் ஜனநாயகத்தை மங்கவைக்கும் சட்டங்களா? என்று அஜய் கேட்டார். உண்மையில் இந்த நடவடிக்கைகள் ஜனநாயகத்திற்கு ஆக்கபூர்வமான உள்ளடக்கத்தைக் கொண்டுவந்து பெருவாரியான மக்களுக்கு யதார்த்தமாக நலன் செய்துள்ளன என்று அஜய் விளக்கம் தந்தார்.

#### பயமுறுத்தல் பலியாது

கேரளத்தில் இன்று காணப்படுவது போன்ற படுமோசமான ஆத்திர மூட்டல்களுக்கு முன்— இவ்வளவு கட்டுப்பாடுடனும் பொறுமையுடனும் எந்த ஒரு காங்கிரஸ் மந்திரி சபையாவது நடந்துகொண்டிருந்தால் அதை நேரு எடுத்துக் கூறட்டும் என்று கேட்டார் அஜய். ஜனநாயகம் இல்லை என்ற நேருவின் விமரிசனத்தை ஏற்க முடியாது என்றார்.

கேரள சர்க்காரைப் பொறுத்தவரையில் நிலைமை தெட்டத் தெளிவாக்கப்பட்டுவிட்டது. சமரசம் பேச சர்க்கார் எப்போதும் தயார். ஆனால் பயமுறுத்தலுக்கு ஒருகாலும் தலைவணங்காது. இந்த முடிவை நல்லெண்ணம் படைத்த சகலரும் ஆதரிப்பார்கள் என்று தாம் நம்புவதாக அவர் கூறினார்.

## கேரள சர்க்காருக்கு உதவி புரிவது மத்திய சர்க்கார் கடமை

### "கிளர்ச்சிகள்" பற்றி பொது நியதிகள் வகுக்கத் தயார்

### சென்னை கூட்டத்தில் ஏ. கே. கோபாலன்

சென்னை, ஜூலை 9—

இந்திய அரசியல் சட்டத்தின் 355வது பிரிவின் கீழ் உள்நாட்டு கொந்தளிப்பு காரணமாகவோ அல்லது வெளிநாட்டு அபாயம் காரணமாகவோ அமைதியற்ற நிலை ஏற்படும்போது ராஜ்ய சர்க்காருக்கு சகலவிதமான, ராணுவ உதவி உட்பட இந்திய அரசியல் சட்டத்தின் 355ம் பிரிவின்கீழ் உள்நாட்டு கலவரம் அல்லது வெளிநாட்டு ஆக்கிரமிப்பு அபாயம் ஏற்படும்போது ராஜ்ய சர்க்காருக்கு எல்லாவிதமான உதவியும் கொடுத்து சட்டம் அமைதியை நிலைநாட்ட மத்திய சர்க்கார் கடமைபட்டுள்ளது. இந்தக் கடமையைச் செய்ய மத்திய சர்க்கார் தவறுமாயின் காங்கிரஸ் அல்லாத ஒரே ஒரு சர்க்காரை பொறுத்துக்கொள்ளும் அளவுக்குக்கூட அவர்களுக்கு ஜனநாயகம் தெரியவில்லை யென்றுதான் அர்த்தம் என்று இன்று மாலை கோகலே மண்டபத்தில் நடந்த திரளான மக்களிடையே தோழர் ஏ. கே. கோபாலன் கூறினார்.

#### அரசியல் கட்சி கோட்பாடு

தோழர் கோபாலன் ஒரு முக்கியமான அறிவிப்பு ஒன்றையும் வெளியிட்டார். "தேர்தலுக்குப் பிறகு பதவிக்கு வரும் ஆளும் கட்சியும் மற்ற எதிர்க்கட்சிகளும் கூடிப்பேசி எல்லோரும் ஒப்புக்கொள்ளக்கூடிய ஒழுங்கு நியதிகளை வகுப்போம். இந்த நியதிகளின்படிதான் எந்த ஒரு குறிப்பிட்ட குறையையும் நீக்க கிளர்ச்சிகள் நடக்கும் என்று நாம் அனைவரும் ஒரு முடிவுக்கு வருவோம். இதற்கு கம்யூனிஸ்ட் கட்சி தயார்" என்று அவர் அறிவித்தார்.

சர்க்கார் மாறவேண்டும் என்பதற்கு ஐந்தாண்டுகளுக்கு ஒரு முறை வரும் தேர்தலைத் தவிர அரசியல் சட்டத்தில் வேறு மார்க்கம் காணப்படவில்லை. ஒரு சர்க்கார் நல்ல சர்க்கார் இல்லை என்பதற்காக கவிழ்ந்துவிடாது அப்படி கவிழ்ந்து போவதை அர

(4-ம் பக்கம் பார்க்க)

## காங்கிரஸ் பார்லிமெண்ட் உறுப்பினர் கைது

தலைச்சேரி, ஜூலை 9—

திரு. கே ஜினச்சந்திரன் காங்கிரஸ் எம். பி. தலைச்சேரியில் 144 சட்டத்தை மீறியதால் கைது செய்யப்பட்டார். அவர் தலைமை தாங்கிய ஊர்வலத்தில் கலந்து கொண்ட 29 தொண்டர்களும் கைது செய்யப்பட்டனர்.






கேரளத்தில் பொதுஜன கொந்தளிப்பு —"ஜனயுகம்"

## "ரஷ்யாவும் அமெரிக்காவும் சேர்ந்திருந்தால் யுத்தம் வராது"

### அமெரிக்க கவர்னர்களிடம் குருஷ்சேவ் அறிவுரை

மாஸ்கோ, ஜூலை 8

சோவியத் யூனியனும் அமெரிக்காவும் நண்பர்களாக இருந்தால் யுத்தமே வராது என்ற சோவியத் பிரதமர் குருஷ்சேவ் இன்று அமெரிக்க கவர்னர்களிடம் கூறினார்.

அமெரிக்க கவர்னர்கள் ரஷ்யாவில் சுற்றுப் பிரயாணம் செய்கின்றனர். அவர்களை நேற்று கிரெம்லினில் குருஷ்சேவ் சந்தித்தார்.

எந்த நாடாவது யுத்தம் ஆரம்பித்தால் நாம் (ரஷ்யாவும் அமெரிக்காவும்) கூட்டாக அந்த யுத்தத்தை நிறுத்திவிடக்கூடும். அமெரிக்காவுடனும் இதர நாடுகளுடனும் நேச உறவை ரஷ்யா விரும்புகிறது என்று குருஷ்சேவ் கூறியதாக அமெரிக்க கவர்னர் கூறினர். (ராய்டர்)

## ரங்கூன் தினசரி ஆசிரியருக்கு 18 மாத கடுங்காவல்

ரங்கூன், ஜூலை 9—

'ரங்கூன் தினசரி' என்ற பிரபல பத்திரிகை ஆசிரியர் 'ஊ யூ பாங் கைது செய்யப்பட்டு 18 மாத கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டார். ஆட்சேபகரமான செய்தியைப் பிரசுரித்ததற்காக ரூ. 500 அபராதமும் விதிக்கப்பட்டது. அந்த பத்திரிகாலய யந்திரங்களை பறிமுதல் செய்யும்படியும் மாஜிஸ்ட்ரேட் உத்தரவு பிறப்பித்துள்ளார்.

## ஜூலை 12 உணவு விலைவாசி எதிர்ப்பு தினம் கொண்டாடுக!

ஊர்வலங்கள், பொதுக்கூட்டங்கள், ஆர்ப்பாட்டங்கள், நடத்துக!

சர்வகட்சி நடவடிக்கைகளாக நடத்த முயற்சி செய்க!

கோரிக்கைகளடங்கிய தீர்மானங்களை சர்க்காருக்கும் பத்திரிகைகளுக்கும் அனுப்புக!

மிகப்பெரிய வெகுஜன அணிவகுப்பைத் திரட்டுக!

படி அரிசி 12 அணாவுக்கு எங்கும் கிடைக்கச் செய்க!

போதிய மலிவு தானியக் கடைகள் திறக்கச் செய்க!

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி, தமிழ்நாடு கமிட்டி.

## அமெரிக்க அணு ஆயுத விமானங்கள் வாபஸாகும்?

பாரிஸ், ஜூலை 8—

பிரெஞ்சு தளங்களிலிருந்த 200 அணு ஆயுத யுத்த விமானங்களை வாபஸ் பெறுவதாக நேடோவிடம் இன்று அமெரிக்கா அறிவித்திருப்பதாக நேடோ வட்டாரங்கள் கூறின. (ராய்ட்டர்)

## டீ கடையில் இருந்த கம்யூனிஸ்டுகளை மறியல்காரர்கள் தாக்கினர்

கொல்லம், ஜூலை 9—

கொல்லம் ஜில்லாவில் குண்டாராவுக்கு அருகில் உள்ள வெள்ளிமான் என்ற ஊரில் டீ கடையில் இருந்த கம்யூனிஸ்டுகளை, பள்ளி மறியலுக்காகச் சென்று கொண்டிருந்த மறியல்காரர்கள் டீ கடைக்குள் புகுந்து தாக்கினார்கள். அதனால் இரண்டு கம்யூனிஸ்டுகள் காயமுற்று, ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்டார்கள்.

#### கம்யூனிஸ்ட் கட்சி அலுவலகத்தில் காலிகள்

இந்தச் செய்தியை வெளியிட்ட ஜில்லா கம்யூனிஸ்ட் கட்சி காரியதரிசி, ராணி என்ற ஊரிலுள்ள கம்யூனிஸ்டு ஆபீஸையும் நேற்று இரவு பலர் திடீரெனப் புகுந்து தாக்கியதாகவும் ஸ்தல கட்சி காரியதரிசியும் மற்றும் பலரும் அடிக்கப்பட்டார்கள் என்றும் கூறினார்.

## இ. எம். எஸ். ஜனாதிபதி, பந்த், மொரார்ஜி, நேரு ஆகியோரைப் பார்ப்பார்

புதுடில்லி ஜூலை 9—

இங்கு வந்துள்ள கேரள முதலமைச்சர், மத்திய போக்குவரத்து மந்திரி எஸ். கே. பாடீலை இன்று மாலை சந்தித்தார். நாளை (10-7-59) ஜனாதிபதியையும், பந்தையும், மொரார்ஜி தேசாயையும் கண்டு பேசுவார்.

#### 11-ல் நேருவுடன்

பிறகு ஜூலை 11-ம் தேதி சிம்லாவில் நேருவைக் கண்டு பேசுவார்.

## 13,000 கேரளத் தொழிலாளருக்குச் சலுகை

புதுடெல்லி, ஜூலை 9—

அரசாங்க இன்ஷ்யூரன்ஸ் திட்டப்பிரகாரம் கேரள ராஜ்யத்தில் மேலும் 13 ஆயிரம் தொழிலாளர்கள் வைத்திய உதவி, பண உதவி பெறுவார்கள்.

# ஜனசக்தி

சென்னை 10-7-1959


## கலகக்காரரே குற்றம் சாட்டுபவர்! அவரே நீதிபதி!

ஒரு குற்றம் புரிந்தவர், அக் குற்றம் புரிந்ததாக நீதிமன்றத்தில் குற்றம் சாட்டுபவர் அக்குற்றத்தை விசாரித்துத் தீர்ப்பு கூறுபவர் ஆகிய மூவரும் ஒரே நபராக இருக்க முடியாது. மூவரும் மூன்று தனித் தனி நபர்கள். இது தான் உலக நாகரீகம் தோன்றிய காலத்திலிருந்து இருக்கும் நீதி. இதுதான் மேற்கத்திய பார்லிமெண்டரி ஜனநாயகத்தில் ஒப்புக்கொள்ளப் பட்டிருக்கும் நீதி! இதுதான் இந்திய அரசியல் சட்டமும் பிரகடனப்படுத்தும் ஜனநாயக நீதி!

ஆனால் இன்று கேரளத்தில் காங்கிரஸ் கடைப்பிடிக்கும் நீதி எது?

தேபரும், இந்திரா காந்தியும், பண்டித நேருவும் உதகையில் கூடி தமது கேரள சகாக்களை கம்யூனிஸ்டு அரசாங்கத்தைக் கவிழ்க்கக் கலகம் நடத்தத் 'தூண்டிவிட்டனர். அங்கு இன்று கலகம் நடப்பதற்குத் தலைமை வகிப்பது காங்கிரஸ்! மறியல் என்ற புனிதமான பெயரில் பள்ளிகளுக்குள் புகுந்து ஆசிரியர்களையும், மாணவ, மாணவிகளை அடிப்பது, அவமரியாதைக்குட்படுத்துவது காங்கிரஸ்! மறியல் என்ற பெயரில் அரசாங்க பஸ்களை மறித்துத் தீ வைப்பது காங்கிரஸ்! மறியல் என்ற பெயரில் சகல அக்ரமங்களும் புரிவது காங்கிரஸ்! இவ்வாறு கேரளக் கலகத்தைத் துவக்கி வைத்து நடத்திவருவது காங்கிரஸ்.

இந்தக் 'கலகம்' கேரளக் கம்யூனிஸ்டு சர்க்கார் மீது கேரளப் பொதுமக்களுக்குள்ள அதிருப்தியின் எதிரொலி என "குற்றப்பத்திரிகை" ஒன்று தயாரித்து அதை ஜனாதிபதியிடம் கொடுப்பது யார்? அதே நேரு, இந்திரா, தேபர் ஆகியவரைக் கலந்து கொண்டு குற்றப்பத்திரிகை சரியான விதத்தில் இருக்கிறதா என அவர்கள் முன்னிலையில் சரிபார்த்துக் கொண்டு, இன்று ஜனாதிபதியிடம் கொடுப்பது யார்? காங்கிரஸின் பிரதிநிதிகளான சங்கர், சாக்கோ கம்பெனி!

இவ்வாறு கம்யூனிஸ்டு ஆட்சி மீது குற்றம் சாட்டுவதும் காங்கிரஸ்!

ஜனாதிபதியிடம் (அதாவது நீதிபதியிடம்) கொடுக்கப்படும் குற்றப்பத்திரிகையின் மீது தனிப்பட்ட முறையில் ஜனாதிபதி நடவடிக்கை எடுக்க முடியுமா? முடியாது. இந்திய அரசியல் சட்டப் பிரகாரம் ஜனாதிபதி தனது மந்திரிசபையின் ஆலோசனைக்குக் கட்டுப்பட்டவர். இந்த மந்திரிசபை யார் தலைமையில் இருக்கிறது? பிரதமர் நேருவின் தலைமையில் தேபர், இந்திரா காந்தி இந்த மந்திரி சபையின் உறுப்பினர் அல்ல வென்றாலும் இவர்களது கட்சியே மந்திரி சபையை நடத்துகிறது.

இவ்வாறு நீதிபதியாக இருக்க வேண்டிய ஜனாதிபதி ஆளும் கட்சியின் சொல்படி நடக்கக் கட்டுப்பட்டவர். அவரும் காங்கிரஸ் கட்சியின் பிரதிநிதி. பிரதமர் நேருவின் தீர்ப்பிற்குக் கட்டுப்பட்டவர்! அந்தக் குற்றப்பத்திரிகைப் பற்றி நேருவுடன் அவரது சகாக்களும் என்ன முடிவு செய்கின்றனரோ அதையே ஜனாதிபதியும் நிறைவேற்றுவார்!

இவ்வாறு கேரளத்தில் கலகத்தைத் தூண்டிவிட்ட ஒரு குற்றவாளி, தனக்குப் பிடிக்காத வேறு ஒருவர்மீது குற்றம் சாட்டுபவராக மாறி (Prosecutor) பிறகு நீதிபதியாகவும் மாறி அந்தக் குற்றச்சாட்டின் மீது தீர்ப்புக் கூறும் நிலையிலுள்ளது காங்கிரஸ்! இதுதான் பண்டித நேரு தனக்குப்பிடிக்காத மற்றொரு அரசியல் கட்சி ஆட்சியிலுள்ள கேரளத்திற்கு வழங்க விரும்புகிற 'நீதி'!

இந்த உண்மையை, அநீதியை, அக்ரமத்தை, காட்டு ராஜா தர்பாரை, ஜனநாயக விரோத, பாசிஸப் போக்கை இன்று இந்திய தேசமெங்குமுள்ள நேர்மையுள்ளம் படைத்த அனைவரும் பார்க்கின்றனர்; நேருவின் ஜனநாயகப் பேச்சின் உண்மை சொரூபத்தைக் காண்கின்றனர்; உள்ளம் வெதும்புகின்றனர்.

கேரளத்தில் இருக்கும் சட்டப்பூர்வமான ஆட்சியைப் பாதுகாப்பது இந்திய நாட்டில் ஜனநாயக வாழ்வைப் பாதுகாக்க நடத்தும் அறப்போராகும். ஜனநாயகவாதிகளுக்கும் ஜன விரோதிகளுக்குமிடையே நடக்கும் போராட்டமாகும்.

இதில் ஒவ்வொரு இந்தியப் பிரஜைக்கும் மகத்தான பங்குண்டு.

காங்கிரசின் கேவலப்போக்கை எதிர்த்து இயக்கம்மேலும் மேலும் தீவிரமடைய வேண்டும். இதை எதிர்த்து கூட்டங்கள், ஆர்ப்பாட்டங்கள், மேலும் அதிகரிக்க வேண்டும். பண்டித நேருவும் அவரது சகாக்களும் நன்கு உணரும் விதத்தில் இவ்விஷயத்தில் உண்மையான பொது ஜன எழுச்சி தோன்ற வேண்டும். கேரளத்தில் கைவைக்காதே என்று முழங்கும் கடிதங்களும், தீர்மானங்களும், தந்திகளும் பிரதமர் காரியாலயத்தில் மலைபோல குவிய வேண்டும். ஜனநாயகத்தைப் பாதுகாக்கும் இந்த அறப்போர் இந்த நாட்டின் நல்வாழ்வின் ஜீவ மரணப்போர் என்பதை உணர வேண்டும்.

## உல்லாசப் பிரயாணப் படகில் தீ விபத்து 24 பேர் மரணம்

ஹாடர் செல்றி, ஜூலை 8—

தென் ஐஸ்லாண்டு நகரத்தின் சமீபம், உல்லாசப் பிரயாணிகள் சென்ற ஒரு படகில் திடீரென்று தீ விபத்து ஏற்பட்டதால் 24 பேர்கள் மாண்டு போனார்கள் என்று தெரியவருகிறது.

சுமார் 60 பிரயாணிகள் அந்தப் படகில் இருந்தார்கள், திடீரென்று தீப்பற்றிக் கொண்டது. பெரியவர்களும், குழந்தைகளும் நீரினுள் குதித்தார்கள். காயமடைந்த 30 பிரயாணிகள் ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்டுள்ளார்கள். (ராய்ட்டர்)

## மோசடி வழக்குப் பேர்வழி

### மறியல் போராட்டத் தொண்டன்

எர்ணாகுளம், ஜூலை 5—

ஜூலை மாதம் 1ந்தேதி கேரள கிளர்ச்சிக்காரர்கள் நடத்திய மறியல் போராட்டத்தில் கலந்து கொண்ட சிலர் திருப்புணத்துறையில் கைது செய்யப்பட்டனர். அவர்களை விசாரணை செய்த இரண்டாம் வகுப்பு மாஜிஸ்திரேட் ஒருவரைத் தவிர மற்றெல்லோரையும் விடுதலை செய்துவிட்டார் இந்த ஒரு ஆசாமியாரென்றால் திரு புணத்துறை பஞ்சாயத்போர்டு முன்னாள் தலைவரான பி. கோவிந்தன் குட்டி மேனனாகும். இவர்மீது பணமோசடி செய்ததாக வழக்குத் தொடரப்பட்டுள்ளது. இது வரை இவர் தலைமறைவாகத் திரிந்து வந்தார். சி. சி. 161/59 162/59 163/59 என்ற நம்பர்களில் இவர்மீது வழக்கு நிலுவையில் இருக்கிறது.

## ராணுவ உதவி தொகையை அமெரிக்க செனட் அங்கீகரித்தது

வாஷிங்டன், ஜூலை 8—

அமெரிக்க செனட் சபை நட்புறவு கொண்ட நாடுகளுக்கு வரும் 12 மாதங்களில் ராணுவ, பொருளாதார உதவி செய்வதற்காக ஒதுக்கப்பட்ட 3,534,000 உதவித் தொகையை ஒப்புக்கொண்டது.

# காங்கிரஸ் கட்சியின் குறுகிய நலனுக்காக ஜனநாயகத்தைக் கொலை செய்யாதீர்!

## கேரளத்தில் நடக்கும் புதிய சதிகளை முறியடிக்க வாரீர்!

**அஜய்கோஷ்**
இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி, பொதுச் செயலாளர்

கேரளத்தில் சகஜநிலை ஏற்படுவதற்குக் காங்கிரஸ் பார்லிமெண்டரி போர்டு நியாயமான, சரியான வழிகாட்டும் என்று எதிர்பார்த்தோருக்கு அதன் தீர்மானம் பெருத்த ஏமாற்றத்தையே ஏற்படுத்தும்.

காங்கிரஸ் பார்லிமெண்டரி போர்டு இந்திய அரசியல் சட்டத்தைக் கட்டிக் காக்கும்; அதில் பொறிக்கப்பட்டுள்ள ஜனநாயக வழி முறைகளைக் கைப்பிடிப்பதை வலியுறுத்தும் என்று நியாயமான நம்பிக்கை கொண்டிருந்தோருக்கு அத்தீர்மானம் ஆழ்ந்த அதிர்ச்சியையே உண்டு பண்ணும். இத்தீர்மானத்தை நிறைவேற்றியதன் மூலம் காங்கிரஸ் தலைவர்கள் தங்களது கட்சியின் செல்வாக்கிற்குச் சேதமே உண்டு பண்ணிக்கொண்டது மட்டுமல்ல; அவர்கள் ஆணையிட்டுக் கூறும் பாராளுமன்ற ஜனநாயகத்துக்கே பெருத்த ஆபத்தை உண்டு பண்ணியிருக்கிறார்கள்.

காங்கிரஸ் நலனை முன்னிட்டு மட்டுமல்ல; பாரத நாட்டின் நலனையும் ஜனநாயகக் கட்டுக்கோப்பின் பாதுகாப்பையும் கணக்கிற் கொண்டுதான் கேரள நிலையைக் காங்கிரஸ் பரிசீலித்தது என்று பார்லிமெண்டரி போர்டு கூறுகிறது: இது சுத்த அபத்தம்.

உண்மை இதற்கு நேர்மாறானது. காங்கிரஸின் குறுகிய கட்சி நலனுக்காக, நமது நாட்டின் ஜனநாயக அமைப்புப் பழிவாங்கப்பட்டுள்ளன. சொல்லப் போனால், இதை மிஞ்சும் ஒரு கட்சி ஓரவஞ்சனையும், பாரபட்சமும் வேறெங்கும் தேடினாலும் கிடைக்காது.

மகேயான மக்களிடையே இயற்கையாக வெடித்தெழுந்துள்ள உணர்ச்சியே இன்றுள்ள 'முட்டுக்கட்டை'க்குக் காரணம் 'மக்கள் எழுச்சி'யின் விளைவே இந்த முட்டுக்கட்டை' என்று பார்லிமெண்டரி போர்டு கூறுகிறது. ஆனால் உண்மை இதற்கு நேர்மாறானது. அரசாங்க நிர்வாகத்தை ஸ்தம்பிக்கச் செய்வதற்கு முன்கூட்டித் திட்டமிட்டு நடத்தப்படும் பலாத்கார முயற்சியே இதற்குக் காரணம். ஜனநாயக பூர்வமாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட மந்திரிசபையை வெளியேற்றுவதற்கு, வெறிபிடித்த வகுப்பு வாதிகளுடன் காங்கிரஸ் மானங்கெட்ட முறையில் சேர்ந்துள்ளதன் இயற்கை விளைவு தான் இந்த 'முட்டுக்கட்டை'க்கு மூலகாரணம்.

இந்த அடிப்படை உண்மையையே பார்லிமெண்டரி போர்டு மூடிமறைக்கிறது. இன்று அதன் தளகர்த்தர்கள் தீவிரமாகக் கேரளத்தில் ஈடுபட்டிருக்கிறார்களே- அந்த 'விடுதலைப்போருக்கு'-பகிரங்கமான அரசியல் சட்ட விரோதப் பலாத்காரப் 'போருக்கு' காங்கிரஸ் பார்லிமெண்டரி போர்டு ஆதரவளித்துப் பச்சை விளக்குக் காட்டிவிட்டது.

### மௌனம் ஏன்

சட்டசபையில் கம்யூனிஸ்ட் மந்திரி சபைக்குள்ள சிறு மெஜாரிட்டியையும், அது தேர்தலில் சிறுபான்மை வாக்குகளைப் பெற்றதையும் பார்லிமெண்டரி போர்டு குறிப்பிடுகிறது.

தனது புரளிப் புயலில் அது ஒரிசாவை மறந்து விட்டது போலும்! சட்டசபையில் தோற்ற பின்னரும், மந்திரிசபை தொடர்ந்து அங்கு நீடித்ததே, அதை மறந்துவிட்டதுபோலும்! காங்கிரஸ் மெஜாரிட்டி வாக்குகள் பெற்றது மைசூரில் மட்டுந்தான் என்ற உண்மையையும் அது மறைத்துக்கொள்ள விரும்புகிறது, 1951-52 பொதுத் தேர்தல்களில் சென்னையில் எதிர்க்கட்சிகள் பெரும்பான்மை ஸ்தானங்கள் பெற்றிருந்துங்கூட, காங்கிரஸ் மந்திரிசபை ஏற்படுத்தப்பட்டது என்ற உண்மையையும் பார்லிமெண்டரி போர்டு மறந்துவிட்டது. சிறு மெஜாரிட்டியென்றும், மைனாரிட்டி வாக்குகள் என்றும் இங்கெல்லாம் அது பேச வாயைத் திறக்கவில்லை.

கேரள சர்க்காரை ஆதரித்த பலரும் எதிர்க்கட்சிகளின் பக்கம் இப்பொழுது சென்றுவிட்டார்கள் என்று பார்லிமெண்டரி போர்டு குறிப்பிடுகிறது. உண்மை நிலையை வேண்டுமென்றே பார்க்க மறுத்துக் கூறும் கூற்றிது. இவ்வாறு குறிப்பிடும் பார்லிமெண்டரி போர்டு, சட்டசபை உப தேர்தல், பஞ்சாயத்து, நகரசபைத் தேர்தல்களைப்பற்றிக் குறிப்பிடாதது ஏன்? இத்தேர்தல்களிலெல்லாம் கம்யூனிஸ்ட் கட்சிக்கு மேலும் ஆதரவு திரண்டு நின்றதல்லவா? சமீபத்தில் நடைபெற்ற சென்னை நகரசபைத் தேர்தலில் காங்கிரஸ் பூரணமாக முறியடிக்கப்பட்டது காங்கிரஸ் மந்திரிசபை, இதனால் ராஜினமாச் செய்து மறு தோதலுக்கு நிற்கவேண்டும் என்று கூட சொல்ல வேண்டாம்: பொதுஜன அபிப்ராயத்தையாவது அது கவனிக்க வேண்டுமென்றுகூட பார்லிமெண்டரி போர்டு வாய் திறக்கவில்லை.

### கொடுமையிலும் கொடுமை

அனைத்தையும் மிஞ்சும் கொடுமை என்னவென்றால் காங்கிரஸ் பார்லிமெண்டரி போர்டு கேரள மந்திரிசபை தனது அரசாங்க பலாத்கார இயந்திரத்தை அடிக்கடி கையாண்டதைக் குறிப்பிடுவதுதான். கேரள சர்க்கார் மிகப் பொறுமையுடனும் அடக்கத்துடனும், நிதானத்துடனும் நடந்துகொண்டுள்ளதை பாரபட்சமற்ற பார்வையாளர் எவரும் பார்க்க முடியும். சட்டங்கள் எவையும் தடை செய்யப்படவில்லை. எதிர்க்கட்சித் தலைவர்கள் வெளிப்படையாக பலாத்காரத்தைத் தூண்டிக் கொண்டிருக்கின்றனர். அதிகாரிகள் அரசாங்க உத்தரவுகளை மீறி நிர்வாகத்தை ஸ்தம்பிக்கச் செய்யவேண்டுமென்று அறைகூவல் விடுகின்றனர். இருந்துங்கூட தடுப்புக்காவல் சட்டத்தின் கீழ் அவர்கள் யாரேனும் கைது செய்யப்பட்டனரா? இல்லை. எதிர்க்கட்சிகளின் இத்தகைய கொள்கையைக் கடைப்பிடித்த தாக, இதர எந்த ஒரு மாகாண அரசாங்கமும் உதாரணம் காட்டமுடியாது.

பாரபட்சக் கொள்கையில் பார்லிமெண்டரி போர்டு, கேரள அரசாங்கம் போலீஸ் துப்பாக்கிப் பிரயோகம் பற்றி விசாரணை நடத்த வேண்டுமென்று கோரியுள்ளது. [illegible] சக்தியோ இல்லையென்று காங்கிரஸ் கருதுகிறது போலும்! பம்பாயிலும், ஆமதாபாத்திலும் பஞ்சாபிலும் போலீஸ் படுகொலை நடைபெற்றபோது அப்போது இந்த பார்லிமெண்டரி போர்டு எங்கே சென்றது? உடனடியாக நீதி விசாரணை நடத்த வேண்டுமென்று தனது மந்திரிசபைகளுக்குப் பார்லிமெண்டரி போர்டு உத்தரவிடாதது ஏன்? உயிரிழந்தவர்களை வைத்துக்கொண்டுமா பாரபட்ச அரசியல் விளையாட்டு?

திட்டமிட்ட பொருளாதார முன்னேற்றத்திற்காக, வளர்ச்சி திட்டங்களைப்பற்றி காங்கிரஸ் பார்லிமெண்டரி போர்டு கவலை தெரிவித்துள்ளது இது அப்பட்டமான மாய்மாலத்தைத் தவிர வேறல்ல சர்க்காரின் எந்த ஒரு நடவடிக்கையிலும் ஒத்துழைப்பை நல்க மறுத்ததில் கேரளக் காங்கிரஸ் முன்னணியில் நின்றது என்பது நன்கு தெரிந்ததே தற்போது நடைபெறும்போராட்டமே இந்த மந்திரிசபை தனது திட்டங்களை நிறைவேற்றுவதிலிருந்து தடுக்கப்பட வேண்டும் என்பதற்குத்தான் அல்லவா?

இது வெளிப்படையாக ஒப்புக் கொள்ளப்பட்டுள்ளது. நாட்டின் செல்வாதாரத்தையும் நாடு மக்களின் செல்வத்தையும் வளப்படுத்தவும், நாட்டு மக்கள் வாழ்க்கையை மேலும் ஜனநாயகப் படுத்தவுமான திட்டங்களை அமுல் நடத்த கேரள அரசாங்கத்தை விடக்கூடாது என்பதற்காக நடைபெறும் போராட்டமே இது.

பார்லிமெண்டரி போர்டின் நேர்மையற்ற தீர்மானம்மேலும் செல்லுகிறது: கத்தோலிக்க பிஷப்புக்களுடனும், நாயர் வகுப்பு வாதிகளுடனும் முஸ்லீம் வகுப்புவாதிகளுடனும் இன்று காங்கிரஸ் கைகோர்த்துள்ளதைப் பற்றி பார்லிமெண்டரி போர்டு தாராளமாக மௌனம் சாதிக்கிறது வகுப்புவாதத்தை எதிர்த்து பல்வேறு சமயங்களில் காங்கிரஸ் அடித்த ஜம்பம் எங்கே? சமீபத்தில்தானே காங்கிரஸ் காரியக் கமிட்டி வகுப்புவாதத்தின் மீது தனது எதிர்ப்பை மீண்டும் வலியுறுத்திற்று?

மந்திரி சபையைக் கவிழ்ப்பதும், அராஜகத்தை விளைவிப்பதுமே நோக்கமாகக் கொண்டு நடத்தப் பெறும் பலாத்கார நடவடிக்கைகளைக் கண்டித்து ஒரு வார்த்தைகூட பார்லிமெண்டரி போர்டு தீர்மானத்தில் இல்லை.

மறியல் செய்வதுகூட பூரணமாகக் கண்டிக்கப்படவில்லை கலெக்டர் காரியாலயத்தின் முன்பும் அரசாங்க அலுவலகங்களின் முன்பும் மறியல் செய்வதைப் பற்றி மௌனம்தான் அனுஷ்டிக்கப்படுகிறது. இந்த மௌனம் மறியலுக்கு ஆதரவளிப்பதாகவே உள்ளது.

இந்தியாவின் சகல பாகங்களிலுமிருந்தும், கம்யூனிஸ்டுகளுக்கு மிக அப்பாற்பட்டவர்கள் கூட கேரள அரசாங்கத்துக்கும் கூடாரப்பைம், கலை முறைக் கொள்கைகளையும் கண்டித்து வருகின்றனர். பார்லிமெண்டரி போர்டு, பொதுஜன அபிப்ராயத்தை யெல்லாம் உதாசீனம் செய்து, கேரள காங்கிரஸின் கூட்டுச் சேர்க்கையையும், கொள்கையையும் அப்படியே ஆதரித்து நிற்கிறது.

பிரதம மந்திரி கொடுத்த ஆலோசனைக்கு இணங்க கேரள மந்திரிசபை சமரசப் பேச்சு வார்த்தைக்கு அழைப்புவிடுத்த போதிலும் இந்த மிகப் பெரும் சமரச அழைப்பை ஏற்றுக்கொள்ளும் படி தனது கேரள சகாக்களுக்கு பார்லிமெண்டரி போர்டு புத்தி கூறவில்லையென்பதில் வியப்பேதும் இல்லை. இத்தகைய சமரசப் போக்கை எதிர்க்கட்சியினரின்பால் எந்த காங்கிரஸ் அரசாங்கமும்காட்டியதுகிடையாது பார்லிமெண்டரி போர்டு இதை பற்றியெல்லாம் ஒன்றும் குறிப்பிடாதது யாருக்கும் புரியாத விஷயமல்ல.

கேரளக் கல்விச்சட்டம் பூராவுமே ஒத்திவைக்கப்படவேண்டும் என்று அது கோரியுள்ளது. இதன் பொருள் என்ன? கேரளத்திலுள்ள லட்சக்கணக்கான பள்ளி ஆசிரியர்களை, பேராசை பிடித்த, பழிவாங்கும் எண்ணங் கொண்டுள்ள மானேஜர்களின் கையில் ஒப்படைக்கவேண்டும் என்பதல்லவா? நெடுநாட்களாகத் தொல்லையுற்றுவரும் இப்பகுதி மக்கள்பாலுள்ள தனது பொறுப்பைக் கேரள மந்திரி சபை தட்டிக் கழிக்க வேண்டும் என்பதுதானே?

இச்சட்டம், இருமுறை ராஜ்ய சட்டசபையில் நிறைவேற்றப் பட்டது மின்றி, சுப்ரீம் கோர்ட் தீர்ப்பையும் பெற்று, ஜனாதிபதியின் அங்கீகாரத்தையும் பெற்றுள்ளது என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டும்.

சம்யுக்த மகாரஷ்டிரக் கிளர்ச்சியின்பால் தாம் அனுஷ்டித்த போக்கென்ன வென்பதைப் பண்டிதநேரு நினைவுபடுத்திக் கொள்ள வேண்டும். நிறைவேற்றப் பட்ட சட்டத்தை மாற்ற விரும்புவதையே அவர் வன்மையாகக் கண்டித்தாரல்லவா? மகாராஷ்டிர மக்கள் அனைவரின் ஆதரவையும் பெற்றிருந்த கோரிக்கையின்பால் அவர் அனுஷ்டித்த போக்கிது. பின் ஏன் கேரளத்தில் இந்த மாற்றம்? அதுவும் ஒருசில, விரல்விட்டு எண்ணக்கூடிய வசதிக்காரர்களின் கேளிக்கை மீது ஏன் இந்த தலைகீழ் மாற்றம்?

### வஞ்சக சூழ்ச்சி!

காரணங்களைத் திரித்துக்கூறி, ஒருபுறத்தில் கேரள மந்திரிசபை இதையெல்லாம் செய்யவேண்டும் என்று கோருகின்ற பார்லிமெண்டரி போர்டு, மறுபுறத்தில் கேரளமந்திரிசபை ராஜினமா செய்து புதிய தேர்தல் நடத்தப்பட வேண்டும் என்றும் கோரியுள்ளது! இதிலிருந்து தெரிவதென்ன? பெதுஜன செல்வாகுள்ள மந்திரி சபையை எப்படியாவது கவிழ்த்துவிட வேண்டும்; என்பதுதான் அவர்கள் எண்ணம் என்பது தெளிவு. இம்முடிவு மிகப் பாரபட்சமானது. நாட்டின் ஒரு முக்கிய கட்சிக்கு சற்றேனும் ஒவ்வாத ஒரு முடிவாகும். காங்கிரஸ் தலைவர்களுக்கு இது களங்கத்தை உண்டு பண்ணும். குறிப்பாக பாரபட்சம் காட்டுகின்ற தலைவர்களின் பெயருக்கு கறையுண்டு பண்ணுடும். 'நேரடி நடவடிக்கை' பற்றியும், 'விடுதலைப் போர்' குறித்தும் கண்டிக்கும் முறையில் பொதுஜன அபிப்பிராயம் உள்ளது. இந்த அபிப்பிராயத்தை ஏமாற்றுவதற்கான கொடிய, வஞ்சகமான முயற்சியே பார்லிமெண்டரி போர்டின் மறு தேர்தலுக்கான ஆலோசனைகள். பலாத்கார நடவடிக்கைகளுக்கு ஒரு எல்லை விதித்துக் கொண்டே பார்லிமெண்டரி போர்டு இதைக் கூறுகிறது. பார்லிமெண்டரி போர்டின் இம்முயற்சியானது ஒரு பிற்போக்கு அரசியல் விரோத இயக்கத்திற்கு 'ஜனநாயக'ப்போர்வைபோர்த்துவதேயாகும்.

### என்ன உரிமையுண்டு?

இடைத் தேர்தல்களில் கேரள மந்திரி சபை தோல்வி கண்டதில்லை. சட்ட சபையிலும் அப்படியே. அரசியல் சட்டத்துக்குப் புறம்பாக அது சென்றதுகிடையாது எதிர்தரப்பினருடன் விவாதிப்பதற்கும், சமரசம் செய்து கொள்வதற்கும் கேரள மந்திரி சபை மறுக்கவில்லை. தங்களை நிராகரிக்காமல் எதிர்த்துவரும் காங்கிரஸ் கட்சியின் தலைவராகும் பண்டித நேருவின் மத்தியஸ்த தீர்ப்பைக் கூட ஏற்றுக் கொள்வதற்குக்கூட கேரள மந்திரிசபை முன்வந்தது. இல்லையேல், கேரள மந்திரி சபை ராஜினமா செய்து, இடைக் காலத் தேர்தல் நடத்த வேண்டுமென்று கேட்பதற்குப் பார்லிமெண்டரி போர்டுக்கு என்ன உரிமை இருக்கிறது? இந்த ஜனநாயகப் போர்வை போர்த்த கோரிக்கையைப் பார்த்து ஏமாறுவதற்கு யாரும் முட்டாள் கல்ல.

நிர்வாகத்தை ஸ்தம்பிக்கச் செய்வதற்குக் கேரளத்தில் நடைபெற்ற முயற்சிகள் வியர்த்தமானதன் காரணமாகத்தான், பார்லிமெண்டரி போர்டு இந்த கேவலமான தீர்மானத்தை நிறைவேற்றியுள்ளது. பள்ளிக்கூடங்கள் சாதாரணமாக இயங்கிவருகின்றன. கத்தோலிக்க-நாயர் வகுப்புவாதிகளுக்கும் அவர்களை ஆதரிக்கும் காங்கிரசாருக்கும் ஏற்பட்டுள்ள பரிதாபகரமான தோல்வியே இது. மறியலை எதிர்த்தும், எதிர்க்கட்சியினரின் குண்டாத்தனத்தை எதிர்த்தும், குறிப்பாக பஸ்களை நிறுத்துவதையும், சேதப்படுத்துவதையும் எதிர்த்தும் கேரளத்தில் எதிர்ப் புணர்ச்சி துரிதமாகப் பொங்கி வருகிறது. இத்தகைய தூண்டுதல்களுடன் விடுக்கப்பட்டுள்ள வேலைநிறுத்த வேண்டுகோள் பரிதாபமான தோலவியில் முடிந்தது. எதிர்க்கட்சிகளினுடைய கிளர்ச்சி அவமானகரமான தோல்வியை நெருங்கியுள்ளது.

இந்த நிலையில்தான், தனது குறுகிய சொந்த கட்சி நலனுக்குகந்த முறையில் பிரச்சினை தீர்விற்காக கடைசி முயற்சியாகத் தனது தீர்மானத்துடன் பார்லிமெண்டரி போர்டு விரைந்துள்ளது. சட்ட விரோதக் கிளர்ச்சிக்கு அது புத்துயிரூட்டியுள்ளது. சொந்த மக்களால் உதறித் தள்ளப்பட்டும், எதிர்காலம் இல்லை என்று பயந்து நடுநடுங்கிக் கொண்டிருக்கும் கேரள காங்கிரஸிற்குக் கடைசி அடைக்கலமான மத்திய தலையீட்டுக்கான வாய்ப்பை உண்டுபண்ணும் முறையில் காங்கிரஸ் பார்லிமெண்டரி போர்டு சூழ்ச்சியான முறையில் தனது தீர்மானத்தை நிறைவேற்றியுள்ளது.

பார்லிமெண்டரி போர்டின் யுக்தானுசார முயற்சியால் யாரும் ஏமாந்துவிடவில்லை. பல பத்திரிகை விமர்சனங்களிலிருந்தும் பொதுஜன எதிரொலியிலிருந்தும் தெளிவாகின்றது. பார்லிமெண்டரி போர்டின் கணக்கு பூராவும்பொய்த்து விட்டது. ஜனநாயக அபிப்பிராயம் ஆத்திரங்கொண்டுள்ளது. உறுதியுடனும் இருக்கின்றது.

### சதியை முறியடிக்கவாரீர்!

ஜனநாயகத்துக் கேற்பட்டுள்ள இப்புதிய தாக்குதலின் சூழ்நிலையில், நாட்டு மக்கள் அனைவரும்—இந்திய அரசியல் சட்டம் பாதுகாக்கப்பட வேண்டும் என்பதில் அக்கறையுள்ள அனைவரும்-என்றுமில்லாத ஒற்றுமையுடனும், வேகத்துடனும் திரண்டெழ வேண்டியது அவசியம். இந்த பலம்தான் பிற்போக்கு வாதிகளைப் பின்வாங்கச் செய்து சூழ்ச்சியில் இறங்க வேண்டிய நிலையை காங்கிரசுக்கு ஏற்படுத்தியுள்ளது. இதே பலம் தான், இப்புதிய சூழ்ச்சியை முறியடித்து, பாராளுமன்ற ஜனநாயகத்திற்குக் குழி தோண்டுவோரின் திட்டத்தைச் சுக்கு நூருக்க வல்லது.

கம்யூனிஸ்ட்கட்சி உறுப்பினர்களும், கட்சி நண்பர்களும் போற்றத்தக்க காரியத்தை இது வரை செய்துள்ளனர். எனினும், இப்புதிய தாக்குதல் வந்துள்ள நிலையில் அவர்கள் சும்மா வாளாவிருக்க முடியாது. ஒவ்வொரு நகரத்திலும், கிராத்திலும் பிரச்சார இயக்கம் துரிதமாக நடத்தப் படவேண்டும். ஜனநாயக சக்திகளை ஒன்றுதிரட்டி, உருக்குக் கோட்டையாக உருவாக்குவதற்கு, வரவிருக்கும் நாட்களில் கம்யூனிஸ்ட் கட்சி இயன்ற தனைத்தும்செய்யவேண்டும். நாட்டின் சகல பகுதியினரும், ஒவ்வொரு தனிமனிதனும் இதன் பொருட்டு அணுகப்படவேண்டும். கூட்டங்கள், ஊர்வலங்கள், வீடுவீடாகச் சென்று ஆதரவு திரட்டுதல், முதலிய பல்வேறு முறைகள் கடைப்பிடிக்கப்பட வேண்டும். நமது விரிந்த, பரந்த நாட்டின் சகல பகுதிகளிலிருந்தும், நமது மகத்தான மக்களின் இதயக் குரலிலிருந்தும், 'கேரளத்தில் கை வைக்காதே'! என்ற ஒரே ஒரு கோஷம் ஒலித்து எதிரொலிக்கவேண்டும்.

## அஹிம்சாவாதிகளின் கவனத்திற்கு ஒரு குறிப்பு

திருவனந்தபுரம், ஜூலை 9—

கேரளத்தில் கிளர்ச்சிக்காரர்கள் கடந்த மூன்று வார காலத்தில் என்னவெல்லாம் காலித்தனமான நடவடிக்கைகளில் ஈடுபட்டு, சர்க்கார் சொத்துக்களுக்கும், பொதுமக்களின் உயிருக்கும் உடைமைக்கும் என்னவெல்லாம் ஊனங்கள் விளைவித்து, அக்கிரமங்கள் செய்துள்ளார்கள் என்பதுபற்றிஅதிகார பூர்வமாகக்கிடைத்த ஒன்றிரண்டு தகவல்களை மாத்திரம் கீழே தருகிறோம். கீழே கொடுக்கப்படும் தகவல்கள் ஜூலை 6-ம் தேதி வரை சேகரிக்கப்பட்டவை.

150 இடங்களில் சர்க்கார் டிரான்ஸ்போர்ட் பஸ்கள் தடுத்து நிறுத்தப்பட்டன. இவை வழிகளில் தடுத்து நிறுத்தப் பட்டன. 10 டிரான்ஸ்போர்ட் படகுகள் மேல் சரமாரியாகக் கல்வீசப் பட்டு சேதப் படுத்தப் பட்டன. 20 டிரான்ஸ்போர்ட் படகுகள் நாசப்படுத்தப் பட்டன. 10 டிரான்ஸ் போர்ட் படகுகளின் எண்ணெய்க் கிடங்குகளுக்குள் சீனி, உப்பு, மணல் ஆகிய பொருட்களைப் போட்டுச் சேதம் விளைவிக்கப் பட்டது. பல படகோட்டிகள் வழியில் தாக்கப்பட்டனர். இதனால், பல படகுப் பாதைப் போக்கு வரத்தை ஒத்திவைக்க வேண்டியதாயிற்று.

### நாசம்! நாசம்!

ஜூன் 30-ம் தேதி மட்டும் 33 இடங்களில் டிரான்ஸ்போர்ட் பஸ்கள் பலாத்காரமாகத் தடுத்து நிறுத்தப் பட்டன. இதனால், அந்தப் பாதையில் பஸ்கள் மேலும் போக முடியாமல் போக்குவரத்துத் தடை ஏற்பட்டது. தனியார் துறை பஸ்கள் கூட தடுத்து நிறுத்தப் பட்டன. ஜூன் 30ம் தேதி மட்டும் 13 பஸ்களின் டயர்கள் காற்றுப் பிடுங்கிவிடப்பட்டு நாசம் செய்யப்பட்டன. ஒரு பஸ்ஸினுடைய டயர்கள் ஆயுதங்களால் கிழித்து நாசம் செய்யப்பட்டன பல பஸ்களின் எண்ணெய்க் கிடங்கில் மணலும், உப்பும் சீனியும்போட்டு நாசம் செய்யப் பட்டது. 6 பஸ்கள் மீது கல்லெறிந்து கண்ணாடிகள் நொறுக்கப்பட்டன. இந்த அக்கிரமங்கள் அனைத்தும் ஒரு நாளில் நடைபெற்றன.

### பிரயாணிக்கும் காயம்

ஜூலை 1ம் தேதி 35 இடங்களில் டிரான்ஸ்போர்ட் பஸ்கள் தடுத்து நிறுத்தப்பட்டன 8 பஸ்களின் டயர்கள் நாசம் செய்யப் பட்டன. 2 பஸ்கள் மீது கற்கள் வீசப்பட்டதால் 2 சிப்பந்திகளுக்கும், ஒரு பிரயாணிக்கும் காயம் ஏற்பட்டது. 2 சிப்பந்திகள் நையப் புடைக்கப்பட்டார்கள்.

ஜூலை 2-ம் தேதி 21 இடங்களில் பஸ்கள் தடை செய்யப் பட்டன. மூன்று பஸ்கள் மீது கல் வீசப்பட்டதால் ஒரு பிரயாணிக்கும் 5 தொழிலாளருக்கும் காயம் ஏற்பட்டது 5 பிரயாணிகள் உதைக்கப்பட்டார்கள்.

### பள்ளிக்கூடங்களுக்குச் சேதம்

5 பள்ளிக்கூடங்கள் தீ வைத்துக் கொளுத்தப்பட்டன. 14 பள்ளிக்கூடங்களின் பொருட்கள்நாசமாக்கப்பட்டன

### காலித்தனம்

ஜூலை 6-ந்தேதி திருவம்பாடி சர்க்கார் பள்ளிக்கூடத்தில் காலிகள் நுழைந்து 5 பேரைத் தாக்கிக் காயப்படுத்தியுள்ளனர். இதில் ஒரு பெண்ணும் காயப் படுத்தப்பட்டாள்.

திருவனந்தபுரத்தில் 3 பஸ்கள் மேல் கல்வீசப்பட்டு கண்ணாடிகள் சேதப் படுத்தப்பட்டன இது போன்றே குமார நல்லூர், ஏற்றுமானூர், குருவிலங்காடு ஆகிய இடங்களில் நடைபெற்றிருக்கிறது.

இவ்வளவு காலித்தனங்கள் நடைபெற்றபோதும் இந்த மறியல் போராட்டம் பலாத்காரமற்ற வகையில், அமைதியாக நடைபெறுகின்றதென்கின்றனர் சில காங்கிரஸ் தலைவர்கள்.

## பி. சி. ஜோஷி ஜனாதிபதியைச் சந்தித்தார்

புதுடில்லி, ஜூலை 8—

கம்யூனிஸ்ட் கட்சி தேசிய கவுன்சில் காரியதரிசி தோழர் பி. சி. ஜோஷியும், பீகார் சட்ட சபை கம்யூனிஸ்ட் கட்சி தலைவர் கரியானந்த் ஆகிய இருவரும் இன்று இந்திய ஜனாதிபதியைச் சந்தித்தார்கள்.

கேரளத்தில் மத்திய அரசாங்கத்தின் தலையீடு என்பது முறையானதல்ல என்று ஜனாதிபதியிடம் எடுத்துக் கூறியதாகத் தெரிகிறது. நல்ல முறையில் பேச்சு வார்த்தை நடைபெற்றது என்று ஜோஷி பிறகு தெரிவித்தார்.

## ஜீலம் நதியில் பெரு வெள்ளம்

ஸ்ரீநகர், ஜூலை 8—

ஜீலம் நதி பெருக்கெடுத்து ஓடுகிறது. இதனால், காஷ்மீரில் ஸ்ரீநகருக்கு மேற்கே பாராமூலா ஜில்லாவில் வெள்ளம் பாய்ந்து பல வீடுகள் விழுந்து விட்டன. இதன் இடிபாடுகளில் சிக்கி 6 பேர் ஏற்கனவே உயிரிழந்தனர். இந்த ஜில்லாவில் 500 வீடுகள் விழுந்திருப்பதாக காஷ்மீர் காட்டிலாகா அமைச்சர் தெரிவித்தார்.

## எல்லையில் பாகிஸ்தான் துப்பாக்கிப் பிரயோகம் விரிவடைகிறது

ஷில்லாங், ஜூலை 8—

பாகிஸ்தான் எல்லையோரத்தில் கச்சார், ஜெயந்தை, காஸி ஆகிய மலை ஜில்லாப் பகுதிகளில் கடந்த மூன்று வார காலமாக பாகிஸ்தானியரின் துப்பாக்கிப் பிரயோகம் மேலும் விரிவுபடுத்தப்பட்டுள்ளது என்று அதிகார வட்டாரச் செய்திகள் கூறுகின்றன.

தக்க பாதுகாப்பு வழங்குவதற்காக வேண்டி எல்லைப் பகுதி மக்கள் வேறு பாதுகாப்பான இடங்களுக்கு மாற்றப்பட்டுள்ளனர்.

## கூட்டு சோவியத்-இந்திய கப்பல் போக்குவரத்து

மாஸ்கோ, ஜூலை 7—

சோவியத் துறைமுகங்களுக்கும் இந்திய துறைமுகங்களுக்குமிடையில் சாமான்களை ஏற்றிச் செல்லும் கப்பல் போக்குவரத்தை இரு நாடுகளும் கூட்டாக நடத்துவது பற்றி சோவியத்-இந்திய பேச்சு வார்த்தை பூர்த்தியாயிற்று.

## அணு ஆயுத உபயோக அதிகாரம்பற்றி ஐக்

வாஷிங்டன், ஜூலை 8—

ஜனாதிபதி ஐசனோவர், தன்னால் முடியாமல் போய்விட்டாலோ, அல்லது தான் மரணம் அடைய ஏற்பட்டாலும், உப-ஜனாதிபதி நிக்சன் தனது அதிகாரத்தை ஏற்றுக் கொண்டால் தனக்குள்ள முழு அதிகாரமும், போர்க்காலங்களில் அணு ஆயுதங்களை உபயோகிக்கும் அதிகாரம் வரையில் எல்லா அதிகாரமும் உண்டு என்று இன்று அறிவித்தார்.

## கம்யூனிஸ்ட் கட்சிக் கிளைகளுக்கு: புதுவைத் தேர்தல் நன்கொடை

—உங்களுடைய நன்கொடையை அனுப்பிவிட்டீர்களா?

—அபேட்சை நியமனம் கடைசி தேதி ஜூலை 15

—காலங் கடத்தாது அனுப்பிவையுங்கள்.

—தேர்தல் ஏற்பாடுகளை உறுதிப்படுத்த உடனே அனுப்பி வையுங்கள்:

நன்கொடை அனுப்ப வேண்டிய விலாசம்:

தோழர் வி. பி. சிண்டன்.

கம்யூனிஸ்ட் கட்சிக் காரியாலயம் 7, வெள்ளாளத் தெரு, புதுச்சேரி.

சென்னை
மா. க. செயற்குழு.

# கேரள சர்க்காருக்கு ஆதரவு காங்கிரஸிற்கு எதிர்ப்பு

## வேலை நிறுத்தம் செய்ய முடிவு

### ஆந்திர பிரதேச தொழிற்சங்க காங்கிரஸின் முடிவு

ஹைதராபாத், ஜூலை 8—

ஆந்திர பிரதேச தொழிற்சங்க காங்கிரஸ் நிர்வாகக் கமிட்டி, கேரள கம்யூனிஸ்ட் அரசாங்கத்தை ஆதரித்தும், நாட்டின் அரசியல் சட்ட பார்லிமெண்டரி ஜனநாயகத்தையும் பாதுகாப்பதற்காக வேண்டி ஜூலை 21-ந்தேதி ஒரு நாள் அடையாள வேலை நிறுத்தம் செய்வது என முடிவு செய்துள்ளது.

நாகார்ஜுன சாகரில் நடைபெற்ற ஆந்திர பிரதேச தொழிற்சங்க காங்கிரஸின் நிர்வாகக் கமிட்டி, சகல தொழிற்சங்கங்களையும், ஜனநாயக எண்ணம் கொண்ட கட்சிகளையும், மக்களையும் தொழிற்சங்கங்களின் அடையாள வேலைநிறுத்தத்தை ஆதரிக்கும் முறையில் ஹர்த்தால் அனுஷ்டிக்கும்படி கேட்டுக்கொண்டுள்ளது.

ஜூலை 14ந்தேதிமுதல் கேரள சர்க்காருக்காதரவாக 21ம் தேதிவரை பொதுக்கூட்டங்கள், ஊர்வலங்கள் ஆகியவை நடத்தி கேரள வாரம் அனுஷ்டிப்பது எனவும் நிர்வாகக் கமிட்டி முடிவு செய்துள்ளது.

ஆந்திர பிரதேச தொழிற்சங்க காங்கிரஸில் இணைந்துள்ள சுமார் ஒரு லட்சத்திற்கதிகம் தொழிலாளர் சர்க்கார் சிப்பந்திகள், தனியார் துறைகளில் வேலை பார்க்கும் சிப்பந்திகள் ஆகியவர்கள் இந்த வேலைநிறுத்தத்தில் பங்கு கொள்வார்கள் என்று அதன் காரியதரிசி திரு. என். சத்தியநாராயண ரெட்டி பத்திரிகை நிருபர்களிடம் தெரிவித்தார்.

## கேரள சர்க்காருக்கு பம்பாய் ஹிந்து மகாசபை ஆதரவு

பம்பாய், ஜூலை 8—

வகுப்புவாத வெறியர்களின் கொடுமையான நடவடிக்கைகளைத் தடுத்து ஒடுக்க கேரள கம்யூனிஸ்ட் சர்க்கார் முயன்று வருவதால் அச் சர்க்காருக்குத் தேசிய உணர்ச்சியுள்ள எல்லா மக்களும் ஆதரவு தர வேண்டுமென்று ஹிந்து மகாசபையின் பம்பாய் பிரதேசக் கமிட்டி ஒரு தீர்மானம் நிறைவேற்றியது.

வகுப்பு வெறியர்கள் முதலியோரின் பலாத்காரச் செயல்கள் அனுமதிக்கப்படுமானால், அவை ராஜ்யங்களிலும் அராஜகம் விளையுமென்றும் காரியக்கமிட்டி எச்சரித்தது.

(பி. டி. ஐ)

# மேற்கு வங்க அரசாங்கம் மீது குற்றப் பத்திரிகை

## ஜனாதிபதியிடம் கம்யூனிஸ்ட் கட்சி சமர்ப்பிக்கும்

கல்கத்தா, ஜூலை 8—

மேற்கு வங்க காங்கிரஸ் அரசாங்கத்தின் ஊழல், ஜனவிரோத நடவடிக்கைகள் பிரசித்தமானவை இவற்றின்மீது ராஜ்ய கம்யூனிஸ்ட் கட்சி ஒரு குற்றப் பத்திரிகை தயாரித்திருக்கிறது. இதை ராஜ்ய சபை கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர் தோழர் பூபேஷ் குப்தா ஜனாதிபதியிடம் அளிப்பார்; ராஜ்ய கவர்னரிடம் வங்க சட்டசபை எதிர்க்கட்சித் தலைவர் தோழர் ஜோதிபாசு அளிப்பார். இம்மாதம் மூன்றாவது வாரத்தில் இப்பத்திரிகைகள் சமர்ப்பிக்கப்படும். இதற்காக ஒரு தேதி நிர்ணயிக்குமாறு ஜனாதிபதிக்கு ஒரு கடிதம் எழுதப்படும் எனவும் பின்னர் இது பத்திரிகைகளுக்கு வெளியிடப்படும் எனவும் தெரிகிறது.

# தண்ணீர், மருத்துவ, சுகாதார வசதிகள்

## மதுரை நகரசபையின் தீர்மானங்கள்?

மதுரை, ஜூலை 6—

மதுரை நகர சபைக் கூட்டம் ஒன்று மதுரை நகர சபைத் தலைவர் திரு. எஸ். தேவசகாயம் தலைமையில் நடைபெற்றது. இக்கூட்டம் கடந்த மாதம் 25, 26 தேதிகளில் நடப்பதாக இருந்தது. மதுரை மில் தொழிலாளர்கள் போராட்டத்திற்கு ஆதரவு தெரிவிப்பதற்காக அன்றைய தினம் நகரசபை நடவடிக்கை ஒத்திவைக்கப்பட்டது. அன்றைய அஜண்டாவிலுள்ள தீர்மானங்கள் இன்று வாசித்து நிறைவேற்றப்பட்டன.

ஆரம்பத்தில் இந்திய பாராளுமன்ற உறுப்பினரும், அருப்புக்கோட்டை நகராட்சி மன்றத்தலைவராக இருந்தவரும், தற்போது சென்னை சட்டசபை உறுப்பினரும் ஜனநாயக காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்தவருமான திரு. எம். டி. இராமசாமி அவர்கள் சமீபத்தில் காலமானதைக் குறித்து கவுன்சிலில் அவரது ஆத்ம சாந்தியடைய அஞ்சலி செய்யப்பட்டது.

இன்றைய கூட்டத்தில் சுமார் 230 தீர்மானங்களில் சுமார் 70 தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. இன்றைய தீர்மானங்கள் நிறைவேற்றியதில் மதுரை நகரிலுள்ள சுகாதார வசதி, மின் விளக்கு வசதி, தண்ணீர் வசதி, மருத்துவ வசதி, மற்றும் இதர அபிவிருத்தி வசதி ஆகியவை பற்றிய தீர்மானங்கள் விவாதிக்கப்பட்டு நிறைவேற்றப்பட்டன.

மதுரை முனிசிபல் மருத்துவ விடுதிகளில் மருந்துகள் சரிவர விநியோகிக்கப்படுவதில்லை என்றும், வியாதியஸ்தர்களிடம் மருத்துவ சிப்பந்திகள் சரிவர நடந்துகொள்வதில்லையென்றும் கே. எஸ். சந்தனம் புகார் கூறினார். தலைமை மருந்து சேகரிப்பு நிலயத்திலிருந்து இதர மருத்துவ விடுதிக்கு விநியோகிப்பதுபற்றிய குறிப்பும், அந்தந்த மருத்துவ விடுதியிலும் அதே குறிப்பும் இருக்கவேண்டுமென்றும், அதிகாரிகள் இதை சரிவர கவனிக்க வேண்டுமென்றும் கூறினார்.

வியாதியஸ்தர்களுக்கு சோப்பு போட்டுக் கழுவகூட சோப்பு இல்லாமல்வியாதியஸ்தர்களையே வாங்கி வரச் சொல்லுகிறார்கள் மதுரை நகரின் பிரசவ மருத்துவ விடுதி மிகவும் மோசமான நிலைக்கு வந்து கொண்டிருக்கிறது.

அடுத்து வரி விதிப்புப் பற்றி விவாதம் நடந்தது. 5 ஆண்டுக்கொருமுறை வரி ஏடு புதுப்பிக்கும் வேலை நடைபெறும் இவ்வருடம் அதற்கு ஒரு ஸ்பெஷல் ஆபீஸர் நியமிக்க ஒரு தீர்மானம் கோரப்பட்டது. இத்தீர்மானத்தின்போது இப்பொழுது வரி புதுப்பிக்கும்போது பல ஆண்டுகளாக ஒரே வரியையும், கட்டிடத்திற்கு குறைந்த மதிப்பு போட்டு வரி செலுத்துபவர்களையும், இன்னும் பலருடைய வீட்டிற்கு சரிவர வரி நிர்ணயிக்காமல் தேக்க மடைந்திருக்கிறது. இதை நன்கு பரிசீலிக்க மதுரை நகரசபை ரெவின்யூ அதிகாரியையும் அப்பரிசீலிப்பில் அனுப்பி கண்காணித்து வரி விதிக்க வேண்டுமென்று சோ. கருப்பையா, எம். மதுரைவீரன் எஸ். காமராஜ் ஆகியோர்கள் இதுபற்றி விவாதம் பண்ணினர். திரு. எஸ் முத்து (தி. மு. க.) இதுபற்றி கூறுகையில் மதுரை நகரின் பல கம்பெனிகளில் சரிவர வரி வசூலிக்கப்படுவதில்லையென்றும் உதாரணமாக மதுரை மில்லின் கட்டிடத்திற்கு ரூ. 5 லட்சம் மதிப்புப் போட்டு வருடக் கணக்கை வரி வசூலிக்கப்படுகிறது. இதுபற்றி பரிசீலிக்க இவ் வருடம் முடிவு செய்ய வேண்டுமென்று கூறினர்.

அடுத்தபடியாக "7-வது வார்டில் தண்ணீர் கஷ்டம் அதிகமாக இருப்பதால் கிணற்றிலிருந்து 10 குழாய்கள் கொடுக்க வேண்டுமென்று திரு எஸ். காமராஜ் கொண்டு வந்த தீர்மானம் இன்ஜினியர் அவர்களால் ஏற்றுக்கொள்ளப்பட்ட தீர்மானமாகும். இத்தீர்மானம் நிறைவேற்றும் பொழுது திரு பி. கே. இராசகோபாலனும், இ. ரெங்கசாமியும் இருக்கிற குழாயிலிருந்து தண்ணீர் வரவில்லை இனியும் குழாய் வேண்டுமா? அப்படியானால் புதுக்கிணறு வெட்டி எஸ்டிமேட் போடலாம்" என்று கூறினர்.

இது பற்றி திருவாளர்கள் எஸ். காமராஜ் எஸ். முத்து கே. எஸ் சந்தானம், எம் மதுரைவீரன், சோ. கருப்பையா மே முனியாண்டி ஆகியோர்கள் இதுபற்றி மற்ற கவுன்சிலர்கள் வார்டு பிரச்சினைகளில் தலையிடக் கூடாது. அந்தந்த வார்டு பிரச்சனை பற்றி பேசும்பொழுது அந்த நிர்வாக அதிகாரி பதில் கூறவேண்டும். இப்படி எதிர்ப்பது சரியல்ல என்று கண்டித்துப் பேசினர்.

பின்பு தலைவரும், கமிஷனரும் ஆலோசித்து மேற்படி பிரச்சினையை இன்சினியருடன் சென்று பரிசீலித்து அந்த கிணற்று பம்பிலிருந்து தண்ணீர் கொண்டு வர முடியுமா? என்று ஆலோசனை செய்து அடுத்த கூட்டத்தில் முடிவு சொல்வதாக குறிப்பிட்டார்.

இறுதியாக மதுரை நகரசபை மருத்துவ விடுதிகள் லாபரேட்டரிகள் முதலியவைகளுக்கு மருந்துகள் வாங்குவது; விநியோகம் செய்வது முதலிய குறைகளை நிவர்த்திக்கும் பொருட்டு ஒவ்வொரு நிலயத்திற்கும் மூன்று பேர் கொண்ட கமிட்டி நியமிக்குமாறு 11-8-58 தேதிய தீர்மானம் வாசிக்கப்பட்டு சுகாதார அதிகாரியின் அபிப்பிராயத்தை கவுன்சில் கேட்டது. சுகாதார அதிகாரியும் ஏற்றுக்கொண்டார். பின்பு இது அவசியமில்லை. சுகாதார கமிட்டியிடமே விட்டுவிடலாமென்று பி கே ராஜகோபாலன் கூற இ ரெங்கசாமி அதை ஆமோதித்துப் பேசினர். இக்கமிட்டி நியமிக்கவேண்டுமென்றும் சேர்மன் உட்பட 5 உறுப்பினர்கள் கொண்ட கமிட்டி அதாவது அக்கமிட்டியில் எஸ். முத்து, எம். முனியாண்டி, வி. பி. ஆர். கெங்காராம், துரைராஜ் எஸ். முருகையா ஆகியோர்கள் உறுப்பினர்களாகக் கொண்ட கமிட்டி நியமிக்கப்பட்டு பரிசீலனை செய்யவேண்டுமென்பதை திரு. எஸ் காமராஜ் கொண்டுவர, திரு. சோ. கருப்பையா ஆமோதித்தார். இது பற்றி முடிவு தெரியவில்லை. ஆதலால் வாக்கெடுப்பு நடைபெற்றது. முதலாவதாக வாக்கெடுப்பு கை தூக்குதல் நடைபெற்றது அதில் திரு. எஸ் காமராஜுக்கு 14ம், ராஜகோபாலுக்கு 14ம் இருந்தது இதை மாற்றி திரும்ப ஒரு தடவை இவ்விருவரின் தீர்மானத்திற்கு சாதகம், பாதகம் தெரிவிக்கும்படி கவுன்சிலர்கள் கேட்டுக்கொண்டதற்கிணங்க மறுபடியும் நடைபெற்றது. அப்போதும் சரிசமமாக 14 வாக்குகள் இருபக்கமும் இருந்தது. பின்பு சேர்மன் தேர்தலின் முடிவு தெரிந்த பின்னர் தனது ஓட்டு இராசகோபாலனுக்கே என்று கூறினர். இது குறித்து திரு காமராஜ் ஒழுங்கு நடவடிக்கைப் பிரச்சினையைக் கிளப்பி தலைவரின் ஓட்டுக்கு வாக்களித்த முறை சரியற்றது என ஜி ஆர். முனியாண்டி, எஸ். பி. ஆண்டி, எஸ். முத்து ஆகியோர்கள் கண்டித்தனர்.

பின்பு மறுபடியும் தேர்தல் நடைபெற்றது. அதில் சேர்மன் கை தூக்கி வாக்களித்த பிறகு அத்தீர்மானம் (இராசகோபாலனது தீர்மானம்) வெற்றி பெற்றது. ஒரு ஓட்டு வித்தியாசத்தில் இத்துடன் கூட்டம் முடிந்தது.

# புதுவையில் குறியிடும் தேர்தல் முறை

## கமிஷனர் அறிவிப்பு

பாண்டிச்சேரி, ஜூலை 8—

கட்சிகளின் தேர்தல் சின்னத்தில் கோடு போடும் தேர்தல் முறை, வரவிருக்கும் பாண்டிச்சேரி ராஜ்யத் தேர்தலுக்கும் அமுலுக்குக் கொண்டுவரப்படுமென்றும், அதற்கு வாக்காளர்களுக்குப் பயிற்சியளிக்கும் பொருட்டு "மாதிரி தேர்தல்களும்" சினிமா மூலம் பிரச்சாரமும் ராஜ்யம் முழுவதும் நடத்தப்படுமென்றும் பாண்டிச்சேரி பிரதம கமிஷனர் எல். ஆர். எஸ். சிங் தெரிவித்தார்.

இந்திய யூனியனுடன் சட்டபூர்வ இணைப்பு பற்றி பிரெஞ்சு பார்லிமெண்டில் விவாதிக்கப்பட இருப்பதாகவும், ஆனால் வரவிருக்கும் தேர்தலுக்கும் அதற்கும் சம்பந்தமில்லையென்றும், பாண்டிச்சேரியில் நியாய விலைக்கடைகள் திறக்கக் கூடிய அளவுக்கு எந்தவிதமான காரணங்களும் இல்லையென்றும் திரு சிங் கூறினர்.

# தஞ்சை ஜில்லாவில் கார்க்கி வில்லடிக்குழு சுற்றுப்பிரயாணம்

தஞ்சாவூர், ஜூலை 7—

சிவகிரி மக்கள் கலாமன்ற கார்க்கி வில்லடி கோஷ்டியினர் தஞ்சை ஜில்லாவில் கீழ் வரும் இடங்களில் தங்கள் நிகழ்ச்சிகளை நடத்தவிருக்கின்றனர்.

ஜூலை 12 மாவட்டக்குடி, 14 செறுவாமணி (மன்னார்குடி தாலுகா); 15 ஊரணிபுரம், 16 பூவலூர் (ஒரத்தநாடு தாலுகா).

தஞ்சை ஜில்லாவில் இதர இடங்களில் மேற்படி குழுவினரின் நிகழ்ச்சிகளை ஏற்பாடு செய்ய விரும்புபவர்கள், கம்யூனிஸ்ட் கட்சி, தஞ்சை ஜில்லாக் கமிட்டிக்கு எழுதினால் ஏற்பாடு செய்யப்படும் என்று, தஞ்சை ஜில்லாக் கவுன்சில் செயற்குழு அறிவிக்கிறது.

# நேருவின் கூற்றுக்கு இ. எம். எஸ். பதில்

## மதுரையில் நிருபர்களுடன் பேட்டி

மதுரை, ஜூலை 8—

தமது டில்லி விஜயம் மத்திய தலையீடு போன்ற எவ்வித குறிப்பிட்ட நடவடிக்கையையும் உணர்த்தவில்லை என கேரள முதலமைச்சர் இ. எம். எஸ். நம்பூதிரிபாட் இன்று மதுரை விமான நிலயத்தில் நிருபர்களிடம் பேசுகையில் கூறினார். டில்லி செல்லும் வழியில் அவர் மதுரை விமான நிலயத்தில் சிறிது நேரம் தங்கினார்.

கல்விச்சட்டம்பற்றியும் இதர குறைபாடுகள்பற்றியும் கேரள எதிர்க்கட்சிகளுடன் விவாதிக்க வேண்டும் என்ற பிரதமரின் யோசனையும் அதே சமயத்தில் இடைக்கால தேர்தல்பற்றிய பிரதமரின் யோசனையும் ஒன்றுக்கொன்று முரணானவை என்றே தமது எண்ணம் என்றும் இரண்டும் முரண்பட்டவை அல்ல என பிரதமர் நேரு நேற்று நிருபர் மாநாட்டில் அறிவித்தது பொருத்தமாக இல்லை எனவும் கேள்வி ஒன்றுக்குப் பதிலளிக்கையில் இ. எம். எஸ். கூறினார்.

"கேரளத்தில் பிரம்மாண்டமான மக்கள் எழுச்சி கட்டுக்கடங்கா வழிகளில் செல்வதைத் தடுக்கவே "கேரள காங்கிரஸ் மறியல் நடத்துகிறது என்ற நேருவின் கூற்றுப்பற்றிக் குறிப்பிடுகையில் நேரு வர்ணிப்பது போன்ற மறியலைக் கேரளக் காங்கிரஸ் நடத்தவில்லை எனவும் பத்திலிருந்து இருபது பேர்வரை அரசாங்க அலுவலகங்கள் முன் இடைஞ்சல் செய்கின்றனர் என்றும் இ. எம். எஸ். கூறினார்.

எதிர்க்கட்சியினரின் குறைபாடுகள் பற்றி விவாதிக்க உரிய காலத்தைப் பிரதமரே குறிக்கலாம் எனவும் இவ்வாறு கூறுவதால் இத்தகைய விவாதத்துக்குக் கேரள அரசாங்கம் முன் நடவடிக்கை எடுக்கவில்லை என்று அர்த்தமாகாது எனவும் ஆலை இந்த யோசனையைப் பிரதமரே வெளியிட்டாரெனவும் எனவே பிரதமரே மற்ற எதிர்க்கட்சிகளுடன் கலந்து இவ்விவாதங்கள் பலன்தருமாஎன்பதைத் தங்களிடம் அறிவித்திருக்கலாம்எனவும் இ எம். எஸ். கூறினார். கேரள அரசாங்கமாவது பிரதமரின் யோசனைகளைப் பகுதியாக ஏற்றிருக்கிறதென்பதையும் அவர் குறிப்பிட்டார்.

ஒரு நிருபர்: நேருவுடன் நீங்கள் மேற்கொண்ட விவாதங்களைக் கொண்டு மத்திய அரசாங்கத் தலையீட்டைப் பிரதமர் தம்மளவில் விரும்புகிறார் என்று நீங்கள் கருதுகிறீர்களா?

பதில்: இதுபற்றிப் பேசுவது முறையல்ல.

ஒரு நிருபர்: மத்திய தலையீடு அரசியல் சட்டத்துக்குப் புறம்பானதல்ல என நேரு கூறுகிறாரே?

இ. எம். எஸ்.: அது வருகையில் பார்த்துக் கொள்வோம்.

மத்திய அரசாங்கம் ஒரு நியாயங்கள் பேசுவதை மக்கள் பெருமளவில் விரும்பவில்லை என ஒரு நிருபர் கூறினார். "மத்திய தலையீட்டைத் தடுத்திருப்பது இந்த அம்சம்தான்" என இ எம். எஸ். பதிலளித்தார்.

# நேருவின் புத்திமதிக்குச் செவிசாய்த்து மறியலை நிறுத்துங்கள்!

## எதிர்க்கட்சிகளுக்கு இ. எம். எஸ். அறிவுரை

திருவனந்தபுரம், ஜூலை 8—

கேரள முதல் அமைச்சர் இ. எம். எஸ். நம்பூத்திரிபாட் டில்லிக்குப் புறப்படும் முன்பு ஓர் அறிக்கை வெளியிட்டார். அந்த அறிக்கையில் அவர் கூறுவதாவது:—"நேற்று பிரதமர் நேரு செய்தி நிருபர்கள் மகாநாட்டில் கல்விச் சட்டம் குறித்தும் மறியல் குறித்தும் வெளியிட்ட கருத்துக்கள் பள்ளிமூடு இயக்கத் தலைவர்களையும் எதிர்க்கட்சிகளையும் தங்கள் நிலையைப் புனராலோசனை செய்யச் செய்யுமென்று நான் நம்புகிறேன். கடந்த சில வாரங்களாக இந்தப் பிரச்சினைகள் சம்பந்தமாக பள்ளிமூடும் இயக்கத் தலைவர்களும் எதிர்க்கட்சிகளும் நடந்துகொள்ளும் விதம் தெரிந்ததே

"பிரதேசக் காங்கிரஸ் தலைவர்களும், இதர எதிர்க்கட்சிகளின் தலைவர்களும் விடுதலைக் கமிட்டியும் இதர நண்பர்களும் இப்பொழுது கடைபிடிக்கும் வழிமுறையின் விளைவுகளைப்பற்றி ஆழ்ந்து சிந்திக்கவேண்டும்.

### பலாத்காரமும் மறியலும் நிற்கவேண்டும்

பாடசாலைகள், பஸ்கள் மறியல் பெயரில் நடக்கும் பலாத்காரச் செயல்களும் சர்க்கார் அலுவலகங்கள் முன்பு கும்பல்கூடி மறியல் நடத்துவதும் நமது ராஜ்யத்தின் க்களுக்குப்பெரும் தீங்கு விளைவித்துவிட்டன. இந்தச் செயல்கள் ஜூலை மாதம் 9ந் தேதி தீவிரமாக்கப்படும் இயக்கத்தைத் தீவிரப்படுத்தும் முயற்சி ஜூலை 9ந் தேதி துவங்கி ஜூலை 15ந் தேதி உச்ச கட்டத்தை அடையுமாம். இதனால் மக்களுக்கு ஏதாவது நன்மை உண்டா? பிரதமரைப் பின்பற்றுவோர் என்று கூறிக்கொள்கிறவர்கள் காலந்தாழாமல் அவரது புத்திமதிக்குச் செவிசாய்த்து பள்ளிகள், பஸ்கள் முன்பு மறியல் செய்வதைப் பூராவும் நிறுத்திவிட வேண்டாமா? சர்க்கார் அலுவலகங்கள் முன்பு கூட்டம் கூடி மறியல் செய்வதையும் கைவிட வேண்டாமா?

### மக்கள் ஒத்துழைப்பு அவசியம்

பிரதமர் நேருவின் புத்திமதியை முன்னிட்டு, இந்த இயக்கங்களின் தலைவர்கள் புனராலோசனை செய்வார்களென்று நம்புகிறேன. இந்த ராஜ்ய மக்களின் எல்லா பிரிவினருக்கும் நான் ஒரு வேண்டுகோள் விடுக்க விரும்புகிறேன். நிலைமை கட்டுக்கடங்காமல் போகாதவாறு தடுப்பதில் ஸ்தல அதிகாரிகளுடன் பொதுமக்கள் ஒத்துழைக்கவேண்டும்

### கூட்டங்கூடவேண்டாம்

விடுதலைக் கமிட்டி மிரட்டுகிற மாதிரி, சர்க்கார் அலுவலகங்கள் முன்பு மறியலும் பஸ்கள் பள்ளிகள்மீது தாக்குதலும் கடுமையானால், ஜனங்கள் கூட்டங்கூடக் கூடாது கூட்டங் கூடுவதால் அதிகாரிகளுக்கு அதிகப்படி சிரமம் ஏற்படுகிறது. நமது ராஜ்யத்தில் அமைதியாக வாழ்க்கை நடத்திவரும் மக்கள் அமைதியைக் காக்க முயற்சிக்க வேண்டும். பாடசாலைகள், பாடசாலைகளின் சொத்துக்கள், மாணவர், ஆசிரியர்கள், பஸ்கள், பிரயாணிகள், டிரைவர்கள் ஆகியோர்மீது தாக்குதல்கள் நடப்பதையும் பொதுமக்கள் தடுக்கவேண்டும்.

### கல்விச் சட்டம்

முழு கல்விச் சட்டம் நிறுத்தப் படவேண்டுமென்பது தமது நோக்கமல்லவென்பதை பிரதமர் நேரு தெளிவுபடுத்திவிட்டார். ஆசிரியர்களுக்குச் சில சிறப்பான உரிமைகளை வழங்கும் ஷரத்துக்களும் நிறுத்திவைக்கப் படவேண்டுமென்பதும் அவரது உத்தேசமல்ல.

ஆனால் இது விஷயமாக கூட்டுறவு நிர்வாகங்கள் சார்பில் பேசுவோரின் நிலை பிரதமர் ஏற்கனவே கூறியனவற்றிற்கு முரண்பாடானதாக இருக்கிறது. அவர்கள் முழு கல்விச் சட்டம் நிறுத்தி வைக்கப்பட வேண்டுமென்றும் கடந்த 27 மாதங்களாக சர்க்கார் பிறப்பித்த நிர்வாக உத்திரவுகள் எல்லாம் நிறுத்திவைக்கப்பட வேண்டுமென்றும் கோருகின்றனர். அவ்விதம் நிறுத்திவைத்தால்தான் சர்க்காரும் மானேஜர்களும் பேச்சு நடத்த சரியான சூழ்நிலை சிருஷ்டிக்கப்படுமென்றும் கூறுகின்றனர்.

இதை ஆசிரியர் ஸ்தாபனங்கள் எல்லாம் எதிர்க்கின்றன. சம்பந்தப்பட்ட கட்சிகள் கருத்துவேற்றுமைகளைப் பற்றி விவாதிப்பதே பரிகாரம் காண வழி.

மானேஜர்கள் குறைந்தது தங்கள் நிலையைப் புனராலோசனை செய்து பேச்சுவார்த்தைக்குச் சம்மதிக்க வேண்டும்.

மறியல் பற்றி பிரதமர் கூறிய புத்திமதிக்கு ஏற்ப எதிர்க்கட்சிகளும் முக்கியமாக காங்கிரசும் நடக்கிறதாவென்பதை அக்கட்சிகள் ஆலோசனை செய்ய வேண்டும்.

# கேரளக் காங்கிரஸ் தலைவர்களின் பலாத்காரத்தை தூண்டும் போக்கு

## கம்யூனிஸ்ட் கட்சி செயற்குழு கண்டனம்

### பலாத்காரத்தில் ஈடுபடுவோர்மீது கடுமையான நடவடிக்கை தேவை

திருவனந்தபுரம், ஜூலை 8—

மத்திய சர்க்கார் தலையிடுவதற்கான அரசியல் சட்ட ரீதியான காரணங்களோ, அல்லது அரசியல் நிலைமையோ இன்று கேரளத்தில் இல்லை, என்று கேரளக் கம்யூனிஸ்ட் கட்சியின் செயற்குழு இன்று விடுத்த ஒரு அறிக்கையில் கூறியுள்ளது

கேரள எதிர்க்கட்சித் தலைவர்கள் உடைமை வர்க்கங்கள் காங்கிரஸ் மேலிடத்தைச் சேர்ந்த சில நபர்கள் ஆகியோரைத் திருப்தி படுத்துவதற்காகவென்று மத்திய சர்க்கார் கேரளத்தில் தலையிட முடியாது. அவ்வாறு செய்வது அரசியல் சட்டத்தை முற்றிலும் ஒதுக்கித் தள்ளுவதாகும்; கேரளத்திற்குள்ளும், வெளியிலும் உள்ள பலமான பொது ஜன அபிப்பிராயத்தையும் புறக்கணிப்பதாகும், என்றும் அந்த அறிக்கை மேலும் கூறுகிறது.

### "நீடித்த போராட்ட"மாம்

"ராஜ்ய சர்க்காரை அகற்றுவதற்காக "நீடித்த போராட்டம்" நடத்த வேண்டும் என்று கேரள பிரதேசக் காங்கிரஸ் கமிட்டித் தலைவர்கள் பேச ஆரம்பித்துள்ளனர். மேலும் தங்கள் பரிவாரங்களுக்கு உற்சாகமூட்டி வைத்துக் கொண்டிருப்பதற்காக மத்திய சர்க்கார் தலையிட வரப் போகிறது என்று அவர்கள் பேசிக் கொண்டு வருகின்றனர்.

### பலாத்காரத் தூண்டுதல்

அதிக தடியடி பிரயோகங்களையும் துப்பாக்கிப்பிரயோகங்களையும் ஏற்படுத்துவதற்காகவும், பிறகு அதை உபயோகப் படுத்தித் தங்களுக்கு சாதகமாகப் பிரசாரம் செய்வதற்காவும் கேரளப்பிரதேச காங்கிரஸ் கமிட்டித் தலைவர்கள் தற்பொழுது ராஜ்யத்தில் பாலாத்காரத்தைக் கட்டவிழ்த்துவிடுவதற்கு முயற்சிசெய்து வருகின்றனர். ஆகவே மக்கள் உண்மையான நிலைமையை உணரும்படியும், விமோசனப் போராட்டத் தலைவர்களின் ஏமாற்று வித்தைக்கு இரையாக வேண்டாம், என்றும் கேரளக் கம்யூனிஸ்ட் கட்சி செயற்குழு மக்களைக் கேட்டுக் கொண்டுள்ளது

மக்கள் அஹிம்சையையே கடைப்பிடிக்கும்படி செயற்குழு வேண்டுகோள் விட்டுள்ள அதே சமயத்தில், ராஜ்யத்தில் பலாத்காரத்தில் ஈடுபடுபவர்களின் மீது அதிகாரிகள் கடுமையான நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும், என்றும் அது கேட்டுக்கொண்டுள்ளது.

# கேரள நிலைமையை ஆராய்வாராம்

## கே. எம். முன்ஷி விஜயம்

திருவனந்தபுரம், ஜூலை 8—

நான்கு நாட்கள் தங்கியிருந்து கேரள நிலைமையை ஆராய்வதற்காகவென்று முன்னாள் உ. பி. கவர்னர் கே. எம். முன்ஷி விமான மூலம் இன்று மாலை இங்கு வந்தார்.

எதிர்க்கட்சித் தலைவர்களுடன் விவாதம் நடத்தி, துப்பாக்கிப் பிரயோகம் நடைபெற்ற இடங்களையும் பார்வையிடுவாராம். கேரளத்தில் மத்திய சர்க்கார் தலையிடவேண்டுமென்று ஏற்கனவே இந்த முன்ஷி கூறியதை வாசகர்கள் அறிவர்.

# மேட்டூர் மில் தொழிலாளர் கூட்டுறவு ஸ்டோர்ஸின்

## பதின்மூன்றுவது ஆண்டு நிறைவு விழா

மேட்டூர் அணை, ஜூன் 29-

இன்று காலை 10 மணிக்கு மேட்டூர் மில் தொழிலாளர் கூட்டுறவு பண்டகசாலையின் 13வது ஆண்டு நிறைவு விழா மேட்டூர் மில் தொழிலாளர் சங்கத்தலைவர் திரு. டி பி ஜமேஷா அவர்கள் தலைமையில் ஆரம்பமாயிற்று.

தலைவர் முன்னுரைக்குப் பிறகு உபகாரியதரிசி ஆர். மாணிக்கம் அவர்களால் ஆண்டறிக்கை வாசிக்கப்பட்டு 1959-60வது வருடத்திற்கு ரூ 10 400 பட்ஜெட் ஒதுக்கப்பட்டு, 1957-58 வருட நிகர லாபம் ரூ 6214-66ஐ மைலாபடி பிரிவின் செய்யப்பட்டு ஸ்டோர்ஸ் சிப்பந்திகளுக்கு 2 மாத சம்பளம் போனசாக வழங்கப்பட்டது. 1959—60-ம் வருடத்திற்குரிய டைரக்டர்கள் தேர்தெடுக்கப் பட்டனர்.

# உடுப்பி தாலூகாவில் பயங்கர வெள்ளம்

## 500 வீடுகள் நாசம்

மங்களூர், ஜூலை 8—

பயங்கர வெள்ளத்தின் காரணமாக உடுப்பி தாலூகாவின் ஆறு கிராமங்களின் தாழ்வான பிரதேசங்களிலிருந்து 500 வீடுகள் நாசமடைந்துள்ளதாக தென் கன்னடம் டெபுடி கமிஷனருக்குத் தந்திமூலம் தகவல் வந்துள்ளது.

நேற்றைய தினம் குண்டாபூர் தாலூகாவில் 4 கிராமங்களில் சுமார் 90 சத வீடுகள் வெள்ளத்தால் சேதமடைந்தனவாம். கால்நடைகள் அனைத்தும் அடித்துக் கொண்டு போகப்பட்டு விட்டன.

# திருவொற்றியூரை சென்னையுடன் இணைக்க மகஜர்

திருவொற்றியூர், ஜூலை 6—

திருவொற்றியூர் பட்டின இணைப்புக் குழுவின சார்பில் ராணி டெக்ஸ்டைல் ஹாலில நடந்த கூட்டத்தில், சென்னை மேயர் திருவொற்றியூருக்கு விஜயம் செய்யும்போது, திருவெற்றியூரை, சென்னை நகரத்துடன் இணைக்கக் கோரி ஒரு மகஜர் சமர்ப்பிப்பது என முடிவு செய்யப்பட்டது.

பட்டின இணைப்புக்குழுவுக்கு திரு. பூபதி நாயக்கர் தலைவராகவும், திரு. கன்னையா நாயுடு உதவித் தலைவராகவும், தி. டி சீனிவாசன் காரியதரிசியாகவும்தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

# திபெத்தில் அடிமை விலங்கு அகன்றது!

ஹாங்காங், ஜூலை 7—

திபெத்தில் உள்ள சமுதாய அமைப்பிலேயே மாற்றத்தைக் கொண்டுவரவும், விவசாய மக்களுக்கும், அடிமைகளுக்கும் விடுதலை வழங்கி நிலங்களை விநியோகம் செய்யப் போவதாகவும் நவசீனம் இன்று அறிவித்துள்ளது.

சம்பளமில்லாத நிர்ப்பந்த வேலை முறை ஒழிக்கப்படும். அதே நேரத்தில் மத சுதந்திரம் பாதுகாக்கப்படும் என்றும் லாசாவில் உள்ள நவசீனச் செய்தி ஸ்தாபனம் அறிவித்தது.

# அறுவடை அதிகமாக இருந்தும் விலைகள் உயருவது ஏன்?

## மத்திய மந்திரிகள் ஆராய்ச்சி

புதுடில்லி, ஜூலை 8—

"இந்த வருடம் நல்ல விளைச்சல் கண்டிருந்தும்கூட, விலைவாசிகள் உயர்ந்துகொண்டே போகின்றனவே ஏன்? பற்றாக்குறை ராஜ்யங்களில்மட்டுமின்றி தேவைக்கு மேல் சிறிது உபரியாக இருக்கும் ராஜ்யங்களில்கூட விலைவாசிகள் ஏறுகின்றனவே ஏன்?"

இந்தக் கேள்விகளுக்கு விடை கண்டுபிடிக்க உணவு ஆலோசனைக் கமிட்டிக் கூட்டத்தில் மத்திய மந்திரிகள் மூளையைக் குடைந்து கொண்டிருந்தார்கள் அக்கூட்டத்தில் பிரதமர் நேரு, யூனியன் உணவு மந்திரி ஏ. பி ஜெயின், சமுதாயநல அபிவிருத்தி உதவிமந்திரி எஸ். கே. டே, உணவு உதவி மந்திரி ஏ. எம். தாமஸ், விவசாயத் துறை திட்டக் கமிஷன் உறுப்பினர் ஸ்ரீமன் நாராயணன், மற்றும் அசோக்மேத்தா முதலியோரும் கலந்து கொண்டார்கள்.

### எதுவாக இருக்கும்?

"இந்த விலைவாசி உயர்வு எல்லாம், ஒரு வேளை சர்க்கார் தானிய வர்த்தகம் நடத்துவதின் விளைவாக இருக்குமா அல்லது சர்க்கார் தானிய வர்த்தகம் செய்வதை எதிர்ப்பதற்காக வேண்டி, வியாபாரிகளும் தானியஉற்பத்தியாளர்களும் விலைவாசிகளை உயர்த்தி விட்டார்களா? ஒரு வேளை பற்றாக்குறை ராஜ்யங்களுக்கு குறைந்த அளவு தானியம் அனுப்பப்படுவதினால் ஏற்பட்ட விலைவாசி உயர்வாக இருக்குமா?" என்றெல்லாம் விவாதித்தார்கள். முடிவாக அரசாங்க தானிய வியாபாரம் சம்பந்தமான நடைமுறை அனுபவ விபரங்களையெல்லாம் அடுத்த மாதத்தில் உறுப்பினர்களுக்குச் சமர்ப்பித்து மீண்டும் பரிசீலிப்பதென முடிவெடுத்தார்கள்.

### வங்க உணவு நிலை

அக்கமிட்டியில் ஒருவர், "வங்காளத்துக்கு அதிக அளவில் மத்திய சர்க்கார் தானியம் அனுப்புகிறது அப்படியிருந்தும் கூட அங்கு உணவுப் பஞ்சமும் விலைவாசி ஏற்றமும் நீடித்துக் கொண்டேயிருக்கிறது. இதன் காரணம் என்ன!" என்று கேட்டார்.

அதற்கு பிரதமர் நேரு பதிலளிக்கையில், "மேற்கு வங்க சர்க்கார் அதிக உதவி கேட்டபோது தந்திருக்கிறோம், இனியும் அதிகமாகக் கேட்டால் அதுவும் தருவோம்" என்றார்.

# கேரள மந்திரி சபை ராஜிநாமா செய்ய டில்லி வற்புறுத்துமாம்!!

## புதுத் தேர்தல் அவசியமென்பதே மத்திய சர்க்கார் கருத்தாம்!

புதுடில்லி, ஜூலை 8—

புதுடில்லி வட்டாரங்களில் பின்வருமாறு பேச்சு நடக்கிறது: கேரளம் குறித்து பிரதமர் நேருவின் கொள்கையை அங்கீகரிக்க இன்று (8-ந்தேதி) மத்திய மந்திரிசபை கூடியது. சாத்தியமான வரை, மத்திய சர்க்காரின் தலையீட்டைத் தவிர்ப்பது; நிலைமை மோசமாகுமானால், புது தேர்தல் சாத்தியமாகுமாறு கம்யூனிஸ்ட் மந்திரிசபை ராஜிநாமா செய்ய மறுக்குமானால், ஜனாதிபதியின் ஆட்சி, திணிக்கப்படும். இதுவே நேருவின் கேரளக் கொள்கை.

### குற்றச்சாட்டுகள்

கம்யூனிஸ்ட் மந்திரிசபைமீது குற்றச்சாட்டுகள் அடங்கிய ஒரு மகஜர் காலத்தில் ஜனாதிபதியிடமும் கேரள கவர்னரிடமும் சமர்ப்பிக்கப்படும்.

கேரள காங்கிரஸ் கட்சி சமர்ப்பிக்கும் குற்றச் சாட்டுகள் கேரளசர்க்காருக்குத் தெரிவிக்கப்பட்டு அச் சர்க்காரின் அபிப்பிராயம் கோரப்படும். பிறகு கேரள சர்க்காரின் பதிலும் கிடைக்கப்பட்டதும் பார்லிமெண்ட் கூடிவிடும். கேரள பிரச்னை பார்லிமெண்டில் ஆலோசனை செய்யப்படும். எவ்வித நடவடிக்கையும் எடுக்கும் முன்பு மத்திய சர்க்காருக்கு பார்லிமெண்டின் ஆதரவு கிடைக்கவேண்டும். பார்லிமெண்டின் ஆதரவுடன் மத்திய சர்க்கார் நடவடிக்கை எடுக்கும். உடனடியாக மத்திய சர்க்காரின் தலையீடு அவசியமாகாவிட்டாலும் கேரள நிலைமை ஆணித்தரமாக விட்டால் இந்த நீண்டவழி அனுசரிக்கப்படும்.

### புதுத் தேர்தல் அவசியமாம்

மத்திய சர்க்காரை பொறுத்த வரையில், கேரளத்தில் புதுத் தேர்தல் நடத்துவது முடியாது என்ற அடிப்படையில் மத்திய சர்க்கார் நடவடிக்கை எடுத்து வருவதாகக் கூறப்படுகிறது.

நாளை கேரள முதல் அமைச்சர் இங்கு வருவதும், புதுத் தேர்தல் இணங்கும்படியும் கவர்னரிடம் ராஜிநாமாவைச் சமர்ப்பிக்கும்படியும் கேட்கப்படுவார் என்றும் கூறப்படுகிறது. முதல் அமைச்சர் இணங்குவாரானால், மத்திய சர்க்காரின் பொறுப்பு பலம் குறையுமென்றும் கருதப்படுகிறது. முதல் அமைச்சர் இ. எம். எஸ். நம்பூதிரிபாடு டில்லிக்குவந்து ராஜிநாமாயோசனையை ஏற்றுக் கொள்ளலாம் என்றும் உடனடியாக தேர்தல் நடத்துவதற்கு சம்மதிக்கலாம் என்றும் இங்குள்ள சில வட்டாரங்களில் கூறப்படுகிறது. அப்படி நடந்தால் கேரள எதிர்க்கட்சிகளை தற்போதுள்ள ஐக்ய முன்னணி கூறப்படுகிறது.

# காங்கிரஸ்காரர் ஜவுளிக் கடையையும் கிளர்ச்சிக்காரர் தாக்கினர்

திருவனந்தபுரம், ஜூலை 5—

ஜூலை 3-ந் தேதியன்று வலிய துறை போலீஸ் ஸ்டேஷனுக்கு அருகில் ஒரு ஜவுளிக் கடையை கிளர்ச்சிக்காரர்கள் தாக்கியது சம்பந்தமாக வெளிவந்த செய்தியில் கடைக்காரர் உண்மையான கம்யூனிஸ்ட் அனுதாபி என்று கூறப்பட்டிருந்தது. இது தவறு. இக் கடைக்காரர் காங்கிரஸ்காரர் என்றும் ஸ்தல எஸ். என். டி. பி. யோகத்தின் பொருளாளர் என்றும் தெரிகிறது. நூற்றுக் கணக்கான ரூபாய் நஷ்டம் ஏற்பட்டிருப்பதாகத் தெரிகிறது.

# அமெரிக்க கிளப்பில் நிறவெறியும், இனவெறியும்

நியூயார்க், ஜூலை 8—

ரால்ப் பஞ்ச், நோபல் சமாதான பரிசு பெற்ற பிரபல அமெரிக்க நீக்ரோவும், இப்போது ஐக்கிய நாடு சபையில் ஒரு முக்கியமான அதிகாரியுமான அவருக்கு அமெரிக்க டென்னிஸ் கிளப்பில் அங்கத்தினராகச் சேர அனுமதி மறுக்கப் பட்டுள்ளது. இந்த கிளப்பில் நீக்ரோக்களும் யூதர்களும் சேருவது தடை செய்யப்பட்டுள்ளது என்று கிளப்பின் தலைவர் தனக்குத் தெரிவித்துள்ளார் என்று பஞ்ச் தெரிவித்தார்.

டென்னிஸ் விளையாட்டுக் கற்றுக் கொண்டிருக்கும் தனது மகனுக்காகத்தான் இக்கிளப்பில் அங்கத்தினராகச் சேர முடியுமா என்று அவர் கேட்டிருந்தார்.




**விநியோகஸ்தர்கள் :** சென்னை நகரம், வட ஆற்காடு, தென்னாற்காடு & செங்கல்பட்டு : மிஸர்ஸ் ராஜ்ஸ்ரீ பிக்சர்ஸ் பிரைவேட் லிமிடெட், சென்னை-2. ★ மதுரை, ராமநாதபுரம் & திருநெல்வேலி : மிஸர்ஸ் தங்கம் தியேட்டர், மதுரை. ★ திருச்சி & தஞ்சாவூர் : மிஸர்ஸ் ஸ்ரீ முருகன் பிக்சர்ஸ், திருச்சி. ★ கோயமுத்தூர் & நீலகிரி : மிஸர்ஸ் கோயமுத்தூர் பிக்சர்ஸ் பிரைவேட் லிமிடெட், கோயமுத்தூர். ★ சேலம் : மிஸர்ஸ் அசோகா பிக்சர்ஸ், டிஸ்ட்ரிபூட்டிங் கம்பெனி, சேலம்-1. ★ மைசூர் & கேரளா : மிஸர்ஸ் ராஜ்ஸ்ரீ பிக்சர்ஸ் பிரைவேட் லிமிடெட், சென்னை-2. ★ சிலோன் : மிஸர்ஸ் சிலோன் தியேட்டர்ஸ், லிமிடெட் கொழும்பு. ★ F.M.S. : மிஸர்ஸ் பஸல் இலாஹி & கோ., சிங்கப்பூர்.

## பஸ் விபத்தில் ஒரு ஸ்திரீ மரணம்

குவாலியர், ஜூலை 8—ராஜஸ்தானத்தில் சந்திரவதனி என்ற இடத்தில் ஒரு பஸ் ரதத்தின் மீது மோதி குடை சாய்ந்ததின் காரணமாக ஒரு ஸ்திரீ கொல்லப்பட்டார். முப்பதுக்கு மேற்பட்ட இதர பிரயாணிகள் காயமடைந்தனர்.

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

சியல் சட்டம் அனுமதிக்குமானால் இந்தியாவில் ஒரு சர்க்கார்கூட, மத்திய சர்க்கார் உட்பட, ஒரு நாள்கூட நீடிக்காது என்று தோழர் கோபாலன் கூறினார்.

கேரளத்தில் மத்திய சர்க்காரின் சட்டவிரோதமான தலையீடு நேரிடாமல் தடுக்கும் பொறுப்பு கம்யூனிஸ்டுகள் மட்டுமில்லாது ஜனநாயகவாதிகள், எந்தக் கட்சியிலிருந்தாலும் அவர்களது கடமையாகும்.

இன்று கம்யூனிஸ்டுகள் ஜனநாயக விரோதமாக அடக்கப்பட்டால் நாளை, உதாரணமாக திராவிட முன்னேற்றக் கழகத்தினர் கூட மக்கள் ஆதரவு பெற்றால் கூட அளவிட காங்கிரஸ் அனுமதிக்காது என்று அவர் எச்சரித்தார்.

ஜனநாயகவாதிகள் மத்திய சர்க்காருக்கு கடிதங்கள், தந்திகள் அனுப்பி கேரளத்தில் தலையிடுவது தவறு என்பதை விளக்க வேண்டும் என்று அவர் கூறினார்.

கூட்டத்திற்கு கம்யூனிஸ்ட் கட்சி தமிழ்நாடு கமிட்டி காரியதரிசி தோழர் எம். ஆர். வெங்கட்ராமன் தலைமை வகித்தார்.

குற்றப்பத்திரிகை தயார் செய்து கிளர்ச்சி செய்து சர்க்காரை மாற்றுவது நியாயம் என்றால் காங்கிரஸ் ஆட்சிபுரியும் பதிமூன்று ராஜ்யங்களிலும் சில தினங்களில் இந்த மாதிரி சர்க்கார் மாற்றத்திற்கான சூழ்நிலையை உருவாக்குவது மிகவும் எளிது. ஆனால் கம்யூனிஸ்ட் கட்சி தற்போது அதுபற்றி யோசிக்கவில்லை என்று அவர் கூறினார். நியாய, ஜனநாயக மனப்பான்மையோடு மத்திய சர்க்கார் நடக்கவேண்டும் என்று அவர் கேட்டுக்கொண்டார்.

கால் பந்தாட்டம்

## பச்சையப்பாஸ் வெற்றி!

சென்னை ஜூலை 9—எம். யூ. சி. காலபந்தாட்ட முதல் போட்டியில் பச்சையப்பாஸ் கோஷ்டி, பெரம்பூர் ஷூஸ் கோஷ்டியை தோற்கடித்தது. பச்சையப்பாஸ் இரண்டு கோலும், பெரம்பூர் ஒருகோலும் போட்டது. பச்சையப்பாஸ் கோஷ்டி ஆட்டம் பெரம்பூர் கோஷ்டியின் ஆட்டத்தைவிட நன்றாக இருந்தது. பெரம்பூர் கோலர் ராஜன் கவனமற்ற முறையில் இருந்ததால் இரண்டு கோல்கள் விழுந்தன பாலகிருஷ்ணன் முதல் கோலையும், இரண்டாவது கோலை கிருஷ்ணமூர்த்தியும் போட்டார்கள். பெரம்பூர் கோஷ்டிக்கு நடு ஆட்டக்காரர் ஜோஸப் கோல் போட்டார். பந்தைத் தலையில் முட்டிபோடப்பட்டதா அல்லது கையால் தள்ளப்பட்டதா என்பது விளையாட்டுக்காரர்களிடையே சச்சரவு ஏற்பட்டது. மத்தியஸ்தர் கோல் என்று சொல்லிவிட்டதால் ஒன்றும் செய்ய முடியவில்லை.

நாளைய ஆட்டம் தெ. ரயில்வே இன்ஸ்டிடியூட் கோஷ்டிக்கும், சைதை எங் ஓரியண்டல்ஸுக்கும் நடைபெறும்.

— என். கே. பாலகிருஷ்ணன்.

## நடக்க இருப்பவை

கமர்ஷியல் மெர்க்கண்டைல் எம்பிளாயீஸ் பெடரேஷன் (வர்த்தக ஊழியர்) சார்பில் நேஷனல் கிரிண்ட்லேஸ் பாங்கி ஊழியர் போராட்ட ஆதரவுக் கூட்டம் மெமோரியல் ஹாலில் 10-7-59 அன்று மாலை 6-30 மணிக்கு நடைபெறும். திரு. எஸ். சி. அந்தோணி பிள்ளை எம். பி., திரு. பி. ராமமூர்த்தி, திரு. ஜீவரத்னம், திரு. ஆர். ராமநாதன் ஆகியவர்கள் பேசுவர்.

★

10-7-59 வெள்ளி மாலை 6 மணிக்கு செம்பியம், குருசாமி கிராமணி தோட்டத்தில் நடைபெறும். செம்பியம் கிளை அலுவலக திறப்பு விழா கூட்டத்தில், தோழர் ஏ. கே. கோபாலன் எம். பி. "கேரள நிலை" பற்றி பேசுவார். அனைவரும் வருக!




ஜனசக்தி அச்சகத்தில் அச்சிட்டு வெளியிட்டவர் எஸ். கிருஷ்ணசாமி, ஆசிரியர்: ப. ஜீவானந்தம். முகவரி: 32, பிராட்வே சென்னை-1. Janasakthi Press, 32, Bradway, Madras-1.